# அறிமுகம் இதோ

# ஹை பவர் ஸர்ஃப்






# நீங்கள் பார்த்தறியாத வெள்ளைவெளேர் சலவைக்கு !

புதிய ஹை பவர் ஸர்ஃப் சலவைச் சக்தியே சக்தி: வேறெந்த சலவைப் பவுடரையும் விட அதிக சக்தி படைத்துள்ளது. அதனால்தான், சக்தி ஓங்கிய அதன் நுரை நீடித்துநின்று, ஆழ ஊடுருவித் துலக்குகிறது...உன்னதமான வெள்ளைவெளேர் உடைகள் உங்கள் குடும்பத்திற்கு.

**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே புதிய ஹை பவர் ஸர்ஃப்...இது வெட்டவெளிச்சம் !**

*இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு. அட்டைப்பெட்டிகளிலும், சீலிட்ட பைகளிலும் மட்டுமே வருகின்றன. உதிரியாக விற்பதில்லை.*

லின்டாஸ்–SU. 191-140 TM

# புது உலகம் கண்டேன்!

## 1. சோவியத் யூனியனில் ஒரு கோயில்

சோவியத் யூனியனுக்கோ, பிற சோஷலிஸ நாடுகளுக்கோ சென்று வந்தவர்களைச் சராசரி இந்திய மக்களில் அநேகர் கேட்கக்கூடிய முக்கியக் கேள்விகளில் ஒன்று, ''அங்கு மதங்களும், வழிபாட்டுச் சுதந்திரமும் உண்டா?'' என்பது. அங்கு சுற்றுப் பயணம் முடித்து திரும்பிய என்னிடமும் பல இடங்களில் பல சந்தர்ப்பங்களில் பலரால் இந்தக் கேள்வி இங்கே திரும்பத் திரும்பக் கேட்கப்பட்டது. மதக்கோட்பாடுகள், நம்பிக்கைகள், பலவிதமான வேறுபட்ட சமயங்கள், உட்பிரிவுகள், திருவிழாக்கள், விரதங்கள், நோன்புகள் பண்டிகைகள் என்பவற்றோடு எல்லாம் தங்கள் வாழ்க்கையைப் பிணைத்துக் கொண்டிருக்கும் இந்தியர்கள் இந்த விஷயத்தில் அக்கறை காட்டுவது, ஆவலோடு கேள்வி கேட்பது எதுவும் புதுமையோ ஆச்சரியமோ இல்லை. கேட்காமல் இருந்தால்தான் ஆச்சரியம்.

''வாழ்க்கையில் மதங்களும், சமயங்களும் கோயில்களும், 'வழிபாடுகளும்'' — பற்றி எவ்வளவு உள்ளார்ந்த முக்கியத்துவமும் அக்கறையும் கொண்டு நம்மவர்களால் இப்படிப்பட்ட ஒரு கேள்வி கேட்கப்படுகிறதோ அப்படிப்பட்ட முக்கியத்துவமும், அக்கறையும் இவற்றைப் பற்றியோ, இவை தொடர்பானவற்றைப் பற்றியோ சோவியத் மக்களுக்கு இல்லை. அவர்களது சமூக அமைப்பில் மனிதாபிமானமும், சமத்துவமும் சமாதான சகவாழ்வுமே முக்கியத்துவம் பெற்றிருக்கின்றன. பிரம்மாண்டமான கனரகத் தொழிற்சாலை ஒன்றுக்கு அங்கே ஆலயத்தின் மரியாதையும் கண்ணியமும் எல்லோராலும் அளிக்கப்படுகின்றன. வைத்திய வசதியும் கல்வியும் இணைக்கப்பட்ட ஒரு குழந்தைகளின் பள்ளிக்கூடத்துக்கோ, மிகப் பெரிய பொது மருத்துவமனைக்கோ, விரதங்களின் சிரத்தையும், வழிபாட்டின் பக்தியும் மேற்கொள்ளப்படுகின்றன. உலக சமாதானமே அவர்களது அருள் வேட்கை என அவர்கள் பெருமையாகச் சொல்லிக் கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். 'மனிதனை வழிபடு! அவனது உழைப்பை வழிபடு, சமாதானத்தை வழிபடு' என்பதுதான் அவர்களுடைய இன்றைய வழிபாட்டுக் கொள்கையாகத் தோன்றுகிறது. இத்தகைய மனப்பான்மை ஐரோப்பாவில் வேறுசில நாடுகளிலும் காணப்படுகிறது. பிரிட்டனிலும் பிரான்ஸிலும் கூட ஆலயங்களில் இளைய தலைமுறையினரின் கூட்டம் குறைந்து வருகிறது. மெல்ல மெல்ல அவை காட்சிப் பொருள்களாக மாறி வருகின்றன. சுற்றுலாப் பயணிகளுக்கு அவை சுற்றிக் காட்டப்படுகின்றன. பிரிட்டனின் புகழ் பெற்ற வெஸ்ட் மினிஸ்டர் ஆலயத்திலும், காண்டர்பரி ஆலயத்திலும் வழிபடுகிறவர்களை விட அதிகமாகச் சுற்றிப் பார்ப்பவர்களையே கண்டேன். பாரிஸில் உள்ள மிகப் பெரிய நோத்ர் டாம் சர்ச்சிலும் அதே நிலைதான். நம்மூரில் கோயில்களில் திருப்பணி உண்டியல்கள் வைத்து வசூல் செய்வது போல், வெஸ்ட்மின்ஸ்டரிலும், காண்டர்பரியிலும் ஜீர்ணோத்தாரணப் பணிக்கு வசூல் செய்து கொண்டிருக்கிறார்கள். (Time is destroying 800 Years old English History. Pay Generously for renovation). என்று எழுதி வெஸ்ட்மின்ஸ்டர் அப்பேயைச் சுற்றியும், உண்டியல்கள்



○ பழங்கால மசூதிகள், சர்ச்சுகள், கோயில்கள் நினைவுச் சின்னங்களாகப் போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன — சுராகானி இந்துக் கோயில் மண்டபம்.



மேலும் உருக்கமாக எழுதி வைத்திருக்கிறார்கள். காண்டர்பரி சர்ச்சிலோ,

''இந்தச் சர்ச்சை செயிண்ட் அகஸ்டஸ் உருவாக்கினார்; இந்தச் சர்ச்சை சாஸர் புகழ்ந்தார்; இந்தச் சர்ச்சுக்காகப் பெக்கெட் இறந்தார்; இந்தச் சர்ச்சின் மேல் ஹிட்லர் குண்டு போட்டான்; இந்தச் சர்ச்சை இன்று காலதேவன் அழித்து வருகிறான். இதற்காக இன்று நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? தாராளமாக நிதி உதவி செய்வீர்களா?''

என்று அழகாக நிதி கேட்டு எழுதி வைத்திருக்கிறார்கள். ஆனாலும் நம்மவர்கள் எந்த நிலையிலும் ஐரோப்பியப் பயணம் செய்து விட்டு வந்த எவரிடமும் பிரிட்டனில் மதம் எப்படி இருக்கிறது? என்றோ, பிரான்ஸில் மதம் எப்படி இருக்கிறது என்றோ கேட்பதே இல்லை. ரஷ்யா என்றால் மட்டும் மதம், வழிபாட்டுச் சுதந்திரம் பற்றி உடனே கேட்கிறார்கள். ''ரஷ்யாவில் பழைய காலத்து மத வழிபாட்டு நிலையங்களை வெல்லாம்கூடத் தரை மட்டமாக இடித்துத் தகர்த்து விட்டார்களாமே?'' என்று பாமரத்தனமாகக் கேட்கிற எல்லைக்குக்கூடச் சிலர் போய்விடுகிறார்கள்.

''சோவியத் யூனியன் எதையும் இடித்துத் தகர்க்காது. இடிப்பதோ தகர்ப்பதோ உலக சமாதானத்தை விரும்பும் அந்நாட்டின் கொள்கை இல்லை'' என்று அப்படிப்பட்டவர்களுக்குச் சற்று அழுத்தமாகவே எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. அந்நாட்டில் பழைய கால மசூதிகள், சர்ச்சுகள், கோயில்கள் அழிக்கப்படவுமில்லை. புதிது புதிதாக அவை கட்டப்படவுமில்லை. புதிய உலகின் ஆலயங்களாக மாபெரும் தொழிற்சாலைகள் கட்டப்படுகின்றன. 'உலகத் தொழிலாளர்களே ஒன்றுபடுங்கள்' — என்ற தொழிலாளர் ஒற்றுமை வழிபாடாகப் போற்றப்படுகிறது.

அந்நாட்டின் அசர்பைஜான் குடியரசிலும் அர்மீனியக் குடியரசிலும், ஜார்ஜியக் குடியரசிலும், லெனின்கிராடிலும், தலைநகரான மாஸ்கோவைச் சுற்றிலும் மசூதிகள், சர்ச்சுகள்,

○ பிரும்மாண்டமான தொழிற்சாலை ஒன்றுக்கு அங்கே ஆலயத்தின் மரியாதை அளிக்கப்படுகிறது — ருஷ்ய நெசவாலை.

ஒரு கோயில் உட்பட அனைத்தும் பத்திரமாக இருப்பதைக் கண்டேன். அர்மீனியாவில் உள்ள சில மிகப் பழமையான சர்ச்சுகளில் தவிர வேறு எங்கும் வழிபடுவதற்காகச் செல்வோரை அதிகம் காணவில்லை என்றாலும் காண்பதற்காகச் செல்வோரை நிறையக் கண்

## நா. பார்த்தசாரதி

டேன். அசர்பைஜானின் தலைநகரான 'பாக்கூ'வில் தங்கியிருந்த ஓட்டலின் மூன்றாவது மாடியிலிருந்து மிக அருகில் ஏதோ ஒரு மசூதியிலிருந்து தொழுகைக்கான அழைப்புக் குரல் கனைக்கூடக் காற்றுவாக்கில் கேட்க முடிந்தது. பழந் தலைமுறையைச் சேர்ந்த முதியோர்

○ மண்டபம் நடுவில் எரியும் அக்னிக்கு முன்பாகக் கட்டுரை ஆசிரியர் (வலது).





## விழிக்கிறார்கள்!

அமெரிக்க டாக்டர்களையும் நீதிபதிகளையும் திகைப்பில் ஆழ்த்தும் ஒரு வழக்கு: 22 வயதான காரன் ஆன் க்வின்லான் என்ற பெண் ஒரு விபத்தில் சிக்கிப் பல ஆண்டுகளாகச் சுய நினைவின்றி ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். பிராணவாயுவும் உணவும் குழாய் மூலம் செலுத்தப்பட்டன. இவருடைய வீட்டார் அந்தக் குழாய்களை எடுத்து விடும்படியும் ஆன் இயற்கையாக இறந்துவிடலாம் என்று கோரியும் டாக்டர்கள் அதற்கு மறுத்து விட்டார்கள். வழக்கு நீதிமன்றத்துக்குப் போயிற்று. அவளை இறந்துவிட அனுமதிக்கலாம் என்று தீர்ப்பு கிடைத்தது. அதன்படியே டாக்டர்கள் மனமில்லாமல் அந்தப் பிராண வாயு, உணவுக் குழாய்களை எடுத்துவிட்டார்கள். அப்படியும் அந்தப் பெண் இறக்கவில்லை. என்ன செய்வது என்று தெரியாமல் எல்லோரும் விழிக்கிறார்கள்.

— நியூஸ்வீக் - கே. ஆர்.

---

சிலர் மட்டும் தொழுகைப் பழக்கத்தைப் போற்றி வருவதாகத் தெரிந்தது. அதே போல் அர்மீனியாவில் உள்ள ஒரு பெரிய பழங்காலச் சர்ச்சில் மெழுகுவர்த்தி ஏற்றி வைத்து வழிபடுகிற சிலரையும் பாதிரியார்கள் சிலரையும் பார்க்க முடிந்தது. அண்மையில் நம் பிரதமர் ஸ்ரீமதி காந்தி அவர்களும் இதே சர்ச்சைச் சுற்றிப் பார்த்து மகிழ்ந்தார்கள் என்று பிரதமருடைய சோவியத் விஜயத்தைப் பற்றிய செய்திகளில் படித்தேன். பழைய நாட்களில் கிறிஸ்துவ மதத்தை முதல் முதலில் அரசாங்க மதமாக அங்கீகரித்த நாடுகளில் அர்மீனியாவும் ஒன்று என்று அந்தப் பழைய சர்ச் வாசலில் சந்திக்க நேர்ந்த சிலர் பெருமையாகச் சொல்லிக்கொண்டார்கள். சென்னையில் உள்ள அர்மீனியன் தெரு பற்றியும் ஆவலாக விசாரித்தார்கள்.

ஆனால் அது ஒரு மதப் பிரசாரம் போன்ற தொனியில் விசாரிக்கப்படவோ சொல்லப்படவோ இல்லை. மதத்தையோ மதங்களையோ காப்பாற்றுவதற்கென்று உரத்த குரலில் பேசுபவர்களும் அங்கில்லை. ஒழிப்பதற்கென்று உரத்த குரலில் பேசுபவர்களும் அங்கு இல்லை. முதலில் இழுத்த கோடு ஒன்றைச் சிறிதாக்குவதற்கு அதைவிடப் பெரிய கோட்டைப் பக்கத்தில் இழுத்துக் காட்டுவது போல் மதங்கள், சமயங்களை விடத் தொழில், உழைப்பு, விஞ்ஞானம் ஆகியவற்றின் இணைப்பாகிய பெரிய கோடு வரையப் பட்டிருக்கிறது. எனினும் நாட்டின் பழைய வரலாறு, பழைய பொருட்கள், பழைய சின்னங்கள் ஆகியவை இருந்தது இருந்தபடியே கட்டிக் காக்கப்படுகின்றன. சுத்தமாகவும், ஒழுங்காகவும், முறையாகவும் வைக்கப்பட்டிருக்கின்றன. இப்படி வைக்கப் பட்டிருப்பவற்றில் ஆலயங்களும் அடங்கும். மியூஸியங்கள், கவிஞர்கள் எழுத்தாளர்களின் நினைவு இல்லங்கள் பழைய ஆலயங்கள் இவை அனைத்தும் ஒருசீரான அக்கறையில் கவனிக்கப்படுகின்றன. கோவில்களுக்கென்று புனித அந்தஸ்து எதுவும் இல்லை. எல்லாவற்றுக்கும் உள்ள பொது அந்தஸ்து அவற்றுக்கும் உண்டு.

வெளிநாடுகளில் ஈரானையும், துருக்கியையும் உள் நாட்டில் அர்மீனியாவையும் எல்லைப் புறமாகக் கொண்ட சோவியத் குடியரசான அசர்பைஜானின் தலைநகராகிய பாக்கூவிலிருந்து 25 கி.மீ. தொலைவில் அபூர்வமாக ஓர் இந்துக் கோவிலும் இருக்கிறது. பழைய கோவில் தான். மாஸ்கோவிலிருந்து அசர்பைஜானுக்கு விமானம் ஏறும்போதுகூட எனக்கு இது தெரியாது. பாக்கூவில் அசர்பைஜான் எழுத்தாளர் யூனியனின் வரவேற்பும், விருந்தும், கருத்துப் பரிமாற்றமும் முடிந்தபின் இந்த விவரத்தைக் கேள்விப்பட நேர்ந்தது. அவர்கள்கூட முதலில், ''இங்கிருந்து இருபத்தைந்து கிலோமீட்டர் தொலைவில் மிகப் பழைய ஓர் இந்தியக் கோட்டை இருக்கிறது. அதை அவசியம் பார்த்துவிடுங்கள்'' என்று தான் சொன்னார்கள். பின்பு இந்திய இயலில் (இண்டாலஜி) சிறிது பற்றுள்ள ஒரு நண்பர், ''அது இந்தியக் கோட்டை அல்ல. இந்துக் கோயில்! போய்ப் பார்த்தால் புரிந்து கொள்வீர்கள்''. என்றார். எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது. பொதுவாக சோவியத் இந்திய இயல் நிபுணர்களுக்கு இந்தியத் தத்துவங்கள் வரலாறு காவியங்கள், புராணங்கள், இதிகாசங்கள் எல்லாவற்றிலும், நல்ல பரிச்சயமும் தெளிவும் இருக்கிறது. அவர்களில் யாரும் சில இந்தியப் பெயர்களை மட்டும் தெரிந்து கொண்டு மற்றவர்களை மருட்டுவதில்லை. எதையும் ஆழமாகத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். மாஸ்கோவில் நான் சந்தித்த இன்ஸ்டிடியூட் ஆஃப் ஓரியண்டல் ஸ்டடீஸ் (Institute of Oriental Studies) நிறுவனத்தைச் சேர்ந்த நிபுணர் ஸெரப்ரியாகோவ் (Serebriakov) கதாசரித் சாகரத்தைப் பற்றியும், காளிதாஸன், பவபூதி, பாஸன் ஆகியவர்களின் நாடகங்களைப் பற்றியும் நுணுக்கமாகவும் ஆழமாகவும் மணிக்கணக்கில் உரையாடிக் கொண்டிருந்தார். சோவியத் இந்திய இயல் நிபுணர்களின் திறமை மறுதினம் பாக்கூவுக்கு அருகே இருக்கும் இந்தியக் கோயிலைப் பார்க்கச் சென்ற போதும் நிரூபணமாயிற்று.

மதத்தையும் இலக்கியங்களையும் சம்பந்தப்படுத்தி அவர்கள் குழப்பிக் கொள்வதில்லை. இராமாயணம், மகாபாரதம், புத்த ஜைன மத இலக்கியங்கள், உபநிஷதங்கள் எல்லாவற்றையும் ரஷ்யனில் மொழிபெயர்க்கிற பணி தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருப்பதாக 'ஸரப்ரியாகோவ்' கூறினார். அவர்களது உண்மை ஆர்வம் அதில் புலப்பட்டது. அசர்பைஜானுக்குச் சென்ற மறுதினம் காலை பத்து மணிக்கு மழை தூறிக் கொண்டிருந்த மங்கலான வெளிச்சத்தில் பாக்கூவிலிருந்து புறப்பட்டு அந்தக் கோவில் இருக்கும் இடத்துக்குச் சென்றோம்.

சாலையின் இருபுறமும் தொழிற்சாலைகள். அந்தக் கடுங் குளிர் காலத்தில் மாஸ்கோவிலும் பிற இடங்களிலும் தரையை வெண் பனி மூடியிருந்தது போலல்லாமல் அசர்பைஜான் மாநிலத்தில் சாதாரணமாகப் பெங்களூரின் ஜனவரி மாதக் குளிர் போல் தான் இருந்தது. அந்த மாநிலத்தின் தலைநகராகிய பாக்கூ நகரிலிருந்து வெளியேறி அரை மணி — முக்கால் மணி நேரத்தில் முன்புறம் புல்வெளி, சிறுவட்டப் பூங்காவோடு கூடிய கல் கோட்டைச் சுவர் ஒன்று தெரிந்தது. அப்போது மழை மேலும் குறைந்து ஏறக்குறையப் பூஞ்சாரலாக மாறியிருந்தது.

வெளியே சாலையின் தரை மட்ட அளவை விடக் கோட்டைச் சுவரின் உட்பகுதி பள்ளமாக இருந்தது. கற்சுவருக்கு அப்பால் வாயிலில் இறங்கி உள்ளே புகுந்ததும் எதிரே ஒரு சிறு கல் மண்டபமும் அதன் மேற்பகுதியில் நான்கு மூலைகளிலுமாக ஜ்வாலையும், நடுவே சிறு விமானமும் ஒரு திரிசூலமும் இருந்தன. நடு மையத்தில் மண்டபத்தின் கீழ்த் தளத்திலும் ஜ்வாலை எரிந்து கொண்டிருந்தது. மதிற்சுவர்களில் திட்டி வாசல் போல் சுவரை ஒட்டினாற்போல் இருபத்தாறு வாயில்கள் இருந்தன. முக்கோண வடிவில் சற்று உயரமானவர் உள்ளே சகஜமாக நுழைந்தால் தலையில் இடிக்கும் அளவுக்குத் தணிவாக அந்த வாயில்கள் இருந்தன. உட்புறம் குகை போல் இருந்தது. நடு மண்டபத்துக்கு முன் பாகத் தரையிலும் ஓம குண்டத்தில் எரிவது போல் கற்களுக்கு நடுவே ஒரு ஜ்வாலை நிரந்தரமாக எரிந்து கொண்டிருந்தது.

அந்த இடத்துக்குப் பெயர் 'சுராகானி' என்றும் கோயிலுக்குப் பெயர் 'ஆதிஷ்கா' என்றும் தெரிந்து கொண்டோம். அப்பகுதியும், கோட்டையும், மண்டபமும் மிக அமைதியான சூழ்நிலையில் இருந்தன. சுற்றிப் பார்க்க வருபவர்கள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். வருகிறவர்களுக்கு அக்கோயிலைச் சுற்றிக் காட்டி விளக்கும் பொறுப்பில் உள்ள 'இஸபெல்லா ஒக்னேவா' என்ற யுவதி எங்களை மிகவும் பிரியமாக வரவேற்றாள். அங்கேயுள்ள கல்வெட்டுக்களைச் சுற்றிக் காண்பித்து விளக்கினாள். ''பல ஆண்டுகளுக்கு முன் மூல்தானிலிருந்து வியாபார நிமித்தம் கப்பலில் இப்பாதையாகச் செல்லும் இருபத்தாறு இந்துக்கள் இங்கே இறங்கித் தங்கள் வழிபாடுகளைச் செய்வது வழக்கமாக இருந்தது'' என்று விவரித்தாள். இந்துக்களின் வாழ்விலும் சமயத்திலும் அக்னிக்கு இருந்த முக்கியத்துவத்தைத் தெளிவாகச் சொன்னாள். அவள் சுட்டிக்காட்டிய கல்வெட்டுக்களில் இருந்த எழுத்துக்கள் நமக்கு அதிகம் பழக்கமான வட இந்திய — தென் இந்தியக் கல்வெட்டு எழுத்துக்களைப் போலவே இருந்தன.

''இங்கு வழிபட்ட இந்துக்கள் தீ வணக்கம் செய்கிறவர்களாக இருந்திருக்க வேண்டும்'' என்றாள் இஸபெல்லா.

''அதெப்படி அவ்வளவு துல்லியமாகச் சொல்கிறீர்கள்? பார்ஸிகள் முதலிய வேறு பல மதத்தினரும் தீ வழிபாடு செய்பவர்கள் தானே?'' என்று கேட்டேன். இஸபெல்லா அயரவில்லை. மேலே விமானத்தை ஒட்டி நடப்பட்டிருந்த திரிசூலத்தைச் சுட்டிக் காட்டினாள்.

''இப்போது திருப்திதானா? இல்லாவிட்டால் என்னோடு வாருங்கள். இங்கேயே மேலும் உறுதியான நிரூபணங்கள் இருக்கின்றன.''

அவளைப் பின்தொடர்ந்தேன். மதிற்சுவரில் அடுத்தடுத்துக் குகை போல் இருந்த முக்கோண வாயில்களில் ஒன்றில் நுழைந்தோம். அதில் கல்வெட்டு — அதன் விரிவுபடுத்தப்பட்ட புகைப்படப் பிரதிகள், வரைபட விளக்கங்கள் எல்லாமே இருந்தன.

அதற்குப் பிறகும் என் முகத்தில் திருப்தியைக் காணவில்லையோ என்னவோ, மற்றொரு பகுதிக்கு அழைத்துச் சென்று, பூஜைப் பாத்திரங்கள், மணி, ஜால்ரா, சங்கு உள்படப் பலவற்றைக் காண்பித்தாள். அங்கு வழிபாடு செய்தவர்கள் எனக் கருதப்படும் இந்துக்கள் எப்படி இருந்தனர் என மாதிரி உருவ அமைப்பு ஒன்றையும் காண்பித்தாள். அங்கு வந்து வழிபாடு செய்தவர்கள் மூல்தானிலிருந்துதான் வந்து போனார்களா என்பது ஆராய்ச்சிக்குரியதாகத் தோன்றினாலும் விமானத்தருகே இருந்த திரிசூலமும், உள்ளே ஒரு பகுதியில் சேர்த்து வைத்திருந்த பூஜை மணி முதலிய பண்டங்களும் சரியான ஆதாரங்களாகத்தான் இருந்தன. கோவிலைத் தெரிந்து கொண்டு சுற்றிப் பார்த்தபின், ''தீ வழிபாடு — பார்ஸிகள் பற்றி நான் மேல் படிப்புக்கு ஆராய்ச்சி செய்து வருகிறேன். எனக்குப் பயன்படுகிற புத்தகங்கள் ஏதாவது இந்தியாவிலிருந்து கிடைக்கக் கூடுமா?'' என்று கேட்டாள் அந்தப் பெண். புத்தகங்கள் அவளுக்குக் கிடைக்கக் கூடும் என நான் நம்பிய சில பம்பாய் முகவரிகளைக் கொடுத்தேன். சுற்றிப் பார்த்து முடித்த பின்னரும் அங்கேயே நெடுநேரம் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்துவிட்டுப் பிற்பகல் மூன்று மணிக்குத்தான் பாக்கூ நகரத்துக்குத் திரும்பினோம்.

திரும்பியபின் நெடுநேரம் செஞ்சிக் கோட்டைக்கு நடுவே இருக்கும் ஒரு கோவிலையோ அல்லது வேறு ஏதாவது ஒரு தமிழ்நாட்டுப் பழங்கோவிலையோ பார்த்துவிட்டு வந்தாற் போன்ற மன நிலைதான் என்னுள் இருந்தது. மதம் சம்பந்தமான கடந்த காலச் சின்னம் ஒன்றை எவ்வளவு அக்கறையுடன் அவர்கள் பேணுகிறார்கள் என்பதற்கு இந்த சுராகானி— ஆதிஷ்கா ஆலயம் ஒன்றே போதும் உதாரணமாகச் சொல்வதற்கு. இன்று இந்த ஆதிஷ்காவில் பூஜை புனஸ்காரமோ, சம்புரோட்சணமோ, வழிபாடோ நடைபெறவில்லை. ஆனாலும் ஒரு நினைவுச் சின்னம் என்ற வகையில் இதை அக்கறையாகக் கட்டிக் காக்கும் சோவியத் மக்களின் கலாசார நாணயமும் நாகரிகமும் மறக்க முடியாதவை. மதிக்கப்பட வேண்டியவை. (தொடரும்)

---

# ஒழித்தார்!

உ. பி. முதல்வர் அவருடைய மாநிலத்தில் சிவப்பு நாடாவை ஒழித்து விட்டார்! இனிமேல் அரசாங்க பைல்களுக்குச் சிவப்பு நாடாவுக்குப் பதில் பச்சை நாடா உபயோகிக்க வேண்டும் என்று உத்தரவிட்டுள்ளார்!

'ஹிம்மத்' —பாலி

# சேமிப்பதற்கு யூகோ பாங்க் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

நீங்கள் எங்கு இருந்தாலும் அங்கே உங்களருகில் ஒரு வசதியான யூகோ பாங்க் உள்ளது. சேமிப்பை எளிதாக்குவதற்காகவே. உங்களை வரவேற்கவும், உங்கள் சேமிப்பை வளரச் செய்யவும் நாடு முழுவதும் எங்கள் கிளைகள் பரந்து இருக்கின்றன.

விவரங்களுக்கு உங்கள் அருகில்
உள்ள யூகோ பாங்க் கிளையை
அணுகவும்



## யூனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC-50A TAM




# கல்கி

நள

ஆனி 28

ஜூலை 11, 1976




### குழந்தை எழுத்தாளர்!

உலகப் புகழ் பெற்ற திரைப்பட இயக்குனர் திரு சத்தியஜித் ரே குழந்தைகளுக்காக இன்று கதைகளும் எழுதுகிறார்!

ரேயின் தாத்தா, உபேந்திர கிஷோர் ராய் தொடங்கிய 'சந்தேஷ்' இன்று வங்கத்தில் பிரபலமான குழந்தைகள் மாதப் பத்திரிகை.

இதில்தான் சத்தியஜித் ரே விஞ்ஞான, வேடிக்கைக் கதைகள் எழுதிக் கொண்டிருக்கிறார்!



---



200 வயது
அமெரிக்க ஜனநாயகம்
வியட்நாம்
லாக்ஹீட்
வாட்டர்-
கேட




20
அம்ச
திட்டம்
காந்தியம்




உடன் பிறப்பே!
செயற்குழுக் கூட்டத்தில்
நீ என் மீது பொழிந்துள்ள
அன்பை இப்பொழுதாவது
எல்லோரும் தெரிந்து
கொள்ளட்டும்!

# கலைமகளின் கண்ணீர்!

"படிக்கும் பழக்கத்திலே நீங்கள் என்ன அர்த்தத்தைக் காண்கிறீர்கள்?''

நூலகத் தலைவி ஒருத்தி இப்படி ஒரு கேள்வி கேட்டாள் — அமெரிக்காவிலே ட்ருமன் காலத்தில் அயல் விவகார மந்திரியாக விளங்கிய டீன் அக்கிஸனை நோக்கி. அவர் உடனே பதில் கூறவில்லை. ''எழுதி அனுப்புகிறேன்'' என்றார். மறு நாள் ஒரு கடிதம் கிடைத்தது அந்தப் பெண்மணிக்கு :

அம்மணி ! 'படிக்கும் பழக்கத்தில் என்ன அர்த்தத்தைக் காண்கிறீர்கள்?' என்று என்னை வினவினீர்கள். நீங்கள் கேட்பதற்கு முன்பாக நான் என்னை அப்படியொரு கேள்வி கேட்டுக் கொண்டதேயில்லை. அதற்கு அவசியம் நேர்ந்ததில்லை. படிப்பது எனக்கு வாழ்வின் ஓர் அம்சமாக, சிந்தனையின் ஓர் அம்சமாக இருந்து வந்திருக்கிறது. வாழ்வதற்கு மூச்சு விடுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவுக்குப் படிப்பதும் அவசியமாயிருந்திருக்கிறது. நான் படிக்காமல் இருந்த ஒரு நாளைக்கூட என்றால் ஞாபகப்படுத்திக் கொண்டு பார்க்க முடியவில்லை. படிப்பதை நிறுத்துவது என்பது என்னில் பாதி இறந்துவிட்டாற் போலத்தான். அதாவது நான் நேரடியாக எவற்றைப் பார்த்து, கேட்டு, ருசித்து, தொட்டு உணர்கிறேனோ இவற்றுக்கு அப்பாலும் நான் வியாபித்திருக்கிறேன் அல்லவா ? அப்படி வியாபித்துள்ள என்னுடைய அந்தப் பகுதியெல்லாம் இறந்துவிட்டதாகிறது. மனத்தின் வாழ்க்கை முழுதும் மடிந்துவிட்டதாகிறது.

படிக்காமலே ஒருவன் இருப்பானேயாகில் ஓதைவிட அதிகமாகவே மரணம் சம்பவிக்கிறது எனலாம். ஏனெனில் ஒருவன் படிப்பதெல்லாம் அனுபவ அறிவைப் போலவே மன வாழ்க்கைக்குள் புகுந்துவிடுகிறது. அனுபவ அறிவைப் படிப்பு அர்த்தமுள்ளதாக்குகிறது. ஏனெனில், படிப்பவன் தன் அனுபவங்களைப் பிறரது அனுபவ ஒளியில் பார்க்கிறான். இதுவே உணரும் ஆற்றலை உச்ச நிலைக்குக் கொண்டு செல்கிறது. மனிதனை மாக்களிடமிருந்து பிரிப்பது இதுதான்.

ஒருவன் படிப்பது கவிதையோ, நாவலோ, கட்டுரையோ, சரித்திரமோ அல்லது வாழ்க்கை வரலாறோ எதுவானாலும் சரி — தன் அனுபவங்களை அலாதி என்று எண்ணி வந்தவன் அப்படியல்ல எனப் புரிந்து கொள்கிறான். அதே போன்ற சூழலில் மற்றவர்கள் எப்படிச் சிந்தித்தார்கள், நடந்து கொண்டார்கள், உணர்ந்தார்கள் என அறிகிறான். சுருங்கச் சொன்னால் ஒருவன் பல்வேறு உணர்ச்சிகளைக் கணக்கிட முடியாத தடவைகளில் கணக்கிட முடியாத விதங்களில் அனுபவிக்கிறான்.

படிப்பதென்பது வாழ்வதே!

டீன் அக்கிஸன் எழுதியதைப் படித்துப் பார்த்த பின்னர் சமீபத்தில் நாளிதழில் வெளி வந்த ஒரு செய்தியையும் பாருங்கள் :

''செப்டம்பர் 75 முடிய கடந்த ஐந்து ஆண்டுகளில் தேசிய புத்தக நிறுவனத்திடம் அறுபத்தெட்டு லட்சம் ரூபாய் மதிப்புள்ள நூல்கள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கின்றன !

''ஐம்பத்தாறு தலைப்புக்களில் வெளியான தமிழ்நூல்களில் எண்பத்தோரு சதவிகிதம் விற்பனை ஆகாமலே உள்ளன!''

தேசிய புத்தக நிறுவனம் ஆரம்பிக்கப்பட்டதே மக்களிடம் படிக்கும் பழக்கத்தை அதிகரிக்கவும் பயனுள்ள நல்ல நூல்களை நியாய விலைக்கு அச்சிடவும்தான். அரசாங்கத்தின் முழு ஆதரவு பெற்றுள்ள அந்த நிறுவனத்துக்கே இந்தக் கதி என்றால் வேறு பல சிறிய பதிப்பகங்கள் எவ்வளவு சிரமப்படும் என்று கூற வேண்டியதில்லை.

ஆயிரம் பிரதிகள் ஒரு நூலை அச்சிட்டுவிட்டு அது விற்று முடிய ஐந்தாறு வருஷங்கள் காத்திருக்க நேர்வது சர்வ சகஜம்.

ஏதோ ஒரு சில பதிப்பகங்கள் வெற்றிகரமாக நடக்கலாம். அந்த வெற்றிக்குப் பின்னால் மனச்சாட்சி பல முறை தோற்றுப் போயிருக்கும் !

''கல்வி அறிவு பெருகியிருப்பதற்கு ஏற்பப் புத்தக விற்பனை கூடவேண்டுமே

கல்கி மலர் 35 இதழ் 50



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

லார் !'' என்றால் அது கால்வாசிக் கதைதான்.

''தேசிய புத்தக நிறுவனமும் வேறு பல பதிப்பகங்களும் வியாபார உத்திகளை நன்கு கையாளவில்லை'' என்றால் அது மற்றொரு கால்வாசிக் கதைதான்.

''என்னென்ன புத்தகங்கள் எங்கெங்கு கிடைக்கும் என்று மக்களுக்குத் தெரிய வருவதில்லை ; நூல் விமரிசனம் வெளியிடுவதைக் கூடப் பல பத்திரிகைகள் நிறுத்திவிட்டன'' என்று குறைப்பட்டால், அது மேலும் ஒரு கால்வாசிக் கதைதான்.

பாக்கியுள்ள முதலும் முக்கியமுமான விஷயம், நூல்களின் விலைகள் மக்களின் வாங்கும் சக்திக்கு அப்பால் போய்விட்டன என்பதுதான். தனி நபர்கள் நூல்களை வாங்குவது என்பது மிக மிகக் குறைந்து விட்டது.

இந்தச் சூழலில் மக்களின் படிப் பார்வத்தையும் பூர்த்தி செய்து, பதிப்பகத்தாருக்கும் உதவி, தேசத்தின் முன்னேற்றத்துக்கும் சிறப்புப் பணியாற்றக்கூடியவை நூலகங்களே.

இந்த நூலகங்கள் சமீப காலங்களில் பட்டபாடு குறித்து ஒரு நூலகமே நிறையக்கூடிய அளவில் புத்தகங்கள் எழுதலாம்.

இனியேனும் நிலைமை சீர்ப்பட்டு, நூலக இயக்கம் புது வேகம் பெற வேண்டும்.

கலைமகள் கண்ணீர் உகுப்பது நிற்க வேண்டும்.

# முன்னாள் முதல்வரின் கடிதம்

அன்புடையீர்,

வணக்கம். தங்கள் கல்கி 4-7-1976 தலையங்கம் கண்டேன். வருமான வரி இலாகாவினர் வேண்டுமென்றே என்னிடம் எந்த விளக்கமும் கோராமல் வெளியிட்ட செய்திகளை நம்பித் தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள் என்று கருதுகிறேன். 33 லட்ச ரூபாய்க்கு நான் நூறு ரூபாய் நோட்டுக்களை மாற்றினேன் என்பது இட்டுக்கட்டிய பொய்யுரையாகும். அதுபோல் நான் நூறு ரூபாய் நோட்டுக்களை எந்த வங்கியிலும் மாற்றவுமில்லை. மாற்றச் சொல்லிக் கட்டளையிடவும் இல்லை.

லட்சக்கணக்கில் என் வீடுகள் பழுதுபார்க்கப்பட்டன என்பதும் மிகத் தவறான தகவலாகும். கோபாலபுரத்தில் உள்ள என் வீடு 1954ல் வாங்கப்பட்டு 1960ல் பெருமளவு மாற்றிக் கட்டப்பட்டதாகும். அதற்கான கணக்குகள் வருமானவரி இலாகாவுக்குத் தரப்பட்டுள்ளன, ஏற்றுக் கொள்ளவும் பட்டுள்ளன.

நான் சுமார் 40 படங்களுக்கு கதைவசனம் எழுதியவன். சுமார் ஆறு ஏழு படங்களைத் தயாரித்து வெளியிட்டவன். மாறனும் அவ்வாறே சுமார் இருபது படங்களுக்கு மேல் கதை வசனமெழுதி, நாலைந்து படங்களைத் தயாரித்தவர். அமிர்தம், இருபது படங்கள் வரை ஒளிப்பதிவாளராகப் பணியாற்றியவர்.

மாறன் மறுப்புவிடும் வாய்ப்பு பெற முடியாததால் அவர் சார்பில் ஒன்று சொல்கிறேன். அண்ணா சாலையில் இருந்த மிகப் பழைய கட்டிடம் மாறனுக்குச் சொந்தமானது (1956-ல்) அதனை எல். ஐ. சி., ஸ்டேட் பாங்க், மூலங்குடி செட்டிநாடு ஆகியவைகளில் சுமார் ஏழு லட்ச ரூபாய் கடன் வாங்கி மாறன் கட்டியிருக்கிறார் என்பதை விசாரித்தறிந்தேன்.

வருமான வரி இலாகா எந்தவிதமான விளக்கமும் தொடர்புள்ளவர்களிடம் கேட்காமல், ஆயிரக்கணக்கில் உள்ள பழுதுபார்த்த செலவுகளை லட்சக் கணக்கில் காட்டியிருப்பது வேண்டுமென்றே என்னைக் களங்கப்படுத்தச் செய்யப்படுகிற அவதூறுப்பிரசாரம் என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,

மு. கருணாநிதி

ராஜாஜி சிந்தனை

## கண்ணன் கதையும் காந்திஜியும்

என்னுடைய கருத்தைக் கூறுகிறேன். எல்லோரும் ஒப்புக்கொள்ளக் கூடிய அளவு சரியான கருத்து என்று சொல்லமாட்டேன். காந்திஜியின் கருத்தும் இது தான் என்றும் கூற மாட்டேன். ஆனால் இதுமட்டும் நிச்சயம். மகாத்மாஜி இது போன்ற மாற்றுக் கருத்துக்களைப் பொறுத்துக் கொள்வார். வாழ்வின் சகல துறைகளைப் பற்றியும் மகாத்மா கூறும் கருத்துக்களையே அனுஷ்டிக்க வேண்டும் என்ற தவறான கருத்து ஒன்று உலவுகிறது. நான் ஒருசமயம் சுற்றுப்பயணம் செய்த காலத்தில் ஓர் ஊரில் அன்பர் ஒருவர் எனக்கு உணவு தர விரும்பினார். எனக்கு வேண்டாம் என்று கூறினேன். எனக்குப் பசியில்லாவிட்டாலும் உண்ணவேண்டும் என்று வற்புறுத்தினார். ''ஆட்டுப் பால் வைத்திருக்கிறேன், குடிக்க வேண்டும்'' என்று சொன்னார். ''நான் ஏன் ஆட்டுப் பால் குடிக்க வேண்டும்?'' என்று கேட்டேன். ''மகாத்மாஜி ஆட்டுப்பால்தானே குடிக்கிறார்?'' என்று அவர் கூறினார். இதுபோல் மகாத்மா செய்வதுபோலவே எல்லா விஷயங்களிலும் செய்யவேண்டும் என்ற எண்ணமுடையவர்களாயிருக்கிறார்கள் பலர். இதிலிருந்து மகாத்மாஜிக்கு நாட்டில் உள்ள செல்வாக்கு எவ்வளவு என விளங்குகிறது. கிருஷ்ணனைப்பற்றியும் கோபிமாரைப் பற்றியும் கதை கூறுகிறார்களே, அதேபோல் இருக்கிறது.

—''ஜாதிகள்'' என்ற கட்டுரையில்

"எனது சின்னஞ் சிறிய செல்வி
துடிதுடிப்பாக ஆரோக்கியமாக மற்றும்
சுறுசுறுப்பாக வளர வேண்டும்.
ஆகையால்தான் அவளுக்கு
நாள்தோறும் போர்ன்விடா தருகிறேன்."

OBM/5800 R TH



## "அவளுடன் ஈடுகொடுக்க இப்போது எனக்கு போர்ன்விடா தேவை!"

"...எங்கள் குடும்பத்தினர் அனைவருமே தினமும் இரண்டு வேளை போர்ன்விடா அருந்துகிறோம். என் கணவர் அதுதான் வேண்டுமென்கிறார். ஏனெனில், போர்ன்விடாவில் மால்ட், பால், க்ளுகோஸ் மற்றும் சர்க்கரையோடு, கோகோவும் செறிந்துள்ளது. கோகோ மிகவும் ஒன்று திரண்ட சக்தியுள்ள உணவுகளில் ஒன்று என்கிறார் அவர். தவிர, மற்ற மால்ட் கலந்த உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் அதிக அளவில் கோகோ உள்ளது. கோகோ, போர்ன்விடாவுக்கு அதிக சுவையும் தருகிறது. என் கண்மணிக்கு போர்ன்விடா என்றால் உயிர். அவளது தசைநார்கள், எலும்புகள் மற்றும் மூளை வளருவதற்குத் தேவையான எல்லா போஷாக்குச் சத்துகளையும் அது தருவதற்கு உதவுகிறது என்பது எனக்குத் தெரியும். அதோடு, மற்ற உணவுப் பானங்களைவிட போர்ன்விடா மிகவும் சிக்கனமானது. நான் தினமும் கோப்பை ஒன்றுக்கு 2 தேக்கரண்டி நிறைய போர்ன்விடா சேர்க்கிறேன். (மற்ற எல்லா உணவுப் பானங்களைப்போல்) என்னுடைய போர்ன்விடா டின் அதிகமான நாட்களுக்கு நீடிக்கிறது.

நீங்களும் வாங்கிப் பாருங்கள் தெரியும்!




கேட்பரிஸ்
**போர்ன்விடா**
சக்தி, வலிமை மற்றும்
இன்சுவை கிட்டும்
உன்னத உணவு பானம்.

ஒவ்வொரு டின்னிலும் அதிக கோப்பை,
ஒவ்வொரு கோப்பையிலும் அதிக சுவை!




ரந்தி தேவன் கதையிலிருந்தும், உஞ்ச விருத்திப் பிராமணன் கதையிலிருந்தும் என்ன தெரிகிறதென்றால் தனக்கென்று ஒன்றுமே வைத்துக் கொள்ளாமல் தானம் பண்ண வேண்டும். தன் பிராணனே போனாலும் சரி, இன்னொரு ஜீவனை நம் உயிரைக் கொடுத்தாவது காப்பாற்ற வேண்டும் என்ற தியாக தத்துவம் தெரிகிறது. இன்னொன்று என்ன தெரிகிறதென்றால், ஒருத்தர் கஷ்டத்தில் இருக்கிறபோது அவர் என்ன ஜாதி, என்ன மதம், நல்லவரா — கெட்டவரா என்று இதையெல்லாம் ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்காமல், அவர்கள் யாராயிருந்தாலும், எப்படிப்பட்டவராயிருந்தாலும் நம்மாலான உபகாரத்தைப் பண்ணி அவர்களுடைய கஷ்டம் நிவிருத்தியாவதற்கு ஸஹாயம் பண்ண வேண்டும் என்பது.

வித்யாசங்கள் பார்க்க வேண்டிய இடத்தில் பார்த்துத்தான் ஆக வேண்டும். சாஸ்திரப்படி லோக க்ஷேமத்துக்காக ஏற்பட்ட அதிகார பேதங்களைக் காப்பாற்றத்தான் வேண்டும். ஆனால் கஷ்டம், துக்கம் என்று வருகிறபோது வித்தியாசமே பார்க்கக் கூடாது.

'குறிப்பாக, அன்னதானத்தைப் பற்றிச் சொல்கிற போது 'யார்க்கும் இடுமின்; அவர் இவர் என்னன்மின்' என்றே சொல்லியிருக்கிறது.

எல்லா தானங்களிலும் அன்னதானம் விசேஷம். பகவானும் கீதையில், எவன் தனக்காக மட்டும் ஆகாரம் தேடிச் சாப்பிட்டுக் கொள்கிறானோ அவனுடைய பாபத்தையும் முழுக்க அவனேதான் அநுபவித்தாக வேண்டும்; வேறு யாரும் அதில் பங்கு எடுத்துக் கொள்ள மாட்டார்கள் என்கிறார்.

அன்னதானத்துக்கு என்ன விசேஷம் என்றால், இதிலேதான் ஒருத்தரைப் பூர்ணமாகத் திருப்திப்படுத்த முடியும். பணம், காசு, வஸ்திரம், நகை, பூமி, வீடு இந்த மாதிரியானவற்றை எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறவன் அதற்கு மேல் தந்தாலும் 'வேண்டாம்' என்று சொல்ல மாட்டான். அன்னம் போடுகிறபோதுதான் ஒருத்தன் என்னதான் முட்ட முட்டச் சாப்பிட்டாலும் ஓர் அளவுக்கு மேல் சாப்பிட முடியாது. 'திருப்தோஸ்மி; போதும்' என்று சொல்கிறான். ஓர் அளவுக்கு மேல் போய் விட்டால், 'இனிமேல் போடாதீர்கள்' என்று மன்றாடக்கூடச் செய்கிறான். இம்மாதிரி ஒருத்தன் பூர்ண மனஸோடு திருப்தி தெரிவிக்கிறபோதுதான் தாதாவுக்கும் தானத்தின் பலன் பூர்ணமாகக் கிடைக்கும்.

நேராக உயிரோடு உடம்பைச் சேர்த்து வைத்து ரக்ஷிப்பதும் அன்னம்தான். அதனால் தான் 'உண்டி கொடுத்தார் உயிர் கொடுத்தாரே' என்று சொல்லியிருக்கிறது. மணிமேகலையில் இப்படி அன்னதான விசேஷத்தைச் சொல்லியிருக்கிறது. அது பௌத்த சம்பந்தமான காப்பியம். பௌத்தம், ஜைனம் எல்லாமே கலந்தாங்கட்டியாக வைதிக சம்பிரதாயங்களோடு சேர்ந்திருப்பதாகவே தமிழில் உள்ள ஐம்பெருங்காப்பியங்களிலிருந்து தெரிகிறது. மணிமேகலைக்குக் காஞ்சீபுரத்தில் அக்ஷய பாத்திரம் கிடைத்து, அவள் அதை வைத்துக் கொண்டு ஸகல ஜனங்களின் பசிப் பிணியையும் போக்கினாள். இதற்கு அநேக யுகங்கள் முந்தியே இதே

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

மயிலை ஞானானந்த நாம சங்கீர்த்தன மண்டலியின் பதினேழாவது வருடாந்திரக் கொண்டாட்ட விழா ஜூலை 10-ந் தேதியும், 11ம் தேதியும் நடைபெற விருக்கிறது. மண்டலியின் சொந்த இடத்தில் விசேஷ பாதுகா பூஜைகளும், பஜனைகளும் திவ்ய நாம சங்கீர்த்தனமும் நடக்கும். மண்டலி கட்டடத்தைப் புதுப்பிக்கவும், அதன்மீதுள்ள கடனைத் தீர்க்கவும் நிதி தேவைப்படுகிறது. இந்தப் புனித சேவைக்கு உதவி புரிய விரும்புவோர் ஸ்ரீ ஞானானந்த நாம சங்கீர்த்தன மண்டலி, 10, சடையப்ப முதலித் தெரு, சென்னை-28 என்ற விலாசத்துக்குப் பொருள் அனுப்பி வைக்கலாம்.

காஞ்சீபுரத்தில் ஸாக்ஷாத் அம்பாளும் இதே அன்னதானத்தைப் பண்ணி யிருக்கிறாள். ஜகன்மாதா இங்கே, 'இரு நாழி நெல் கொண்டு எண் நான்கு அறம் இயற்றினாள்' என்று சொல்லியிருக்கிறது.

எண் நான்கு அறம் என்றால் முப்பத்திரண்டு தர்மங்கள். தர்மம் என்றால் மநுஷ்ய வாழ்க்கையை எல்லா விதத்திலும் உத்தமமாக நடத்துவதற்கான நியமங்கள்தான் என்றாலும், பொதுவழக்கில் 'தானம்' என்ற ஒன்றுக்கு மட்டுமே 'தர்மம்' என்ற பேரும் வந்துவிட்டது. தர்மங்களில் இது அத்தனை உசத்தியான இடத்தைப் பெற்று விட்டது. 'தான – தர்மம்' என்று சேர்த்துச் சேர்த்தே சொல்கிறோம். 'தர்மத் தாயே, தர்மம் போடு தாயே' என்றுதான் பிச்சைக்காரர்கள் கூடச் சொல்கிறார்கள். 'தர்மசாலை' என்றாலே அன்னசத்திரம் என்று அர்த்தமாயிருக்கிறது. வேதப் பிரமாணத்துக்கு ஸமதையான சிறப்புப் பெற்ற அவ்வை வசனத்திலும் 'ஈதல் அறம்' என்று தானத்தைத் தர்மம் என்று equate பண்ணிச் சொல்லி யிருக்கிறது. இப்படி முப்பத்திரண்டு வகையான அறங்களை, அதாவது தானங்களை சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கிறது. முதலில் ஜனங்களுக்கு "உணவிதல்", அப்புறம் பசுக்களுக்கு இரை கொடுப்பது, இப்படியே சொல்லிக் கொண்டு போய், தர்ம சத்திரம் கட்டுவது, நந்தவனம் வைப்பது, வைத்தியசாலை வைப்பது, குளம் வெட்டுவது என்றெல்லாம் சொல்லிக் கடைசியில் ரொம்பக் குறைச்சலான திரவியச் செலவில் செய்கிற தண்ணீர் பந்தல் கைங்கரியத்தோடு முடித்திருக்கிறது. சிரமமும் இதில்தான் குறைச்சல். சிரமமும் செலவும் குறைச்சல் என்றாலும், வாயும் தொண்டையும் வற்றி வருகிறவர்களுக்கு ஜில்லென்று புனர்ஜீவன் தருகிற மாதிரி தண்ணீர்ப் பந்தல் வைத்து மோர்த் தீர்த்தம் தருவது மகா பெரிய புண்யமாகும். நம் பெரியவர்கள் தலை முறைத் தத்துவமாகச் செய்து வந்த இம்மாதிரியான நல்ல விஷயங்களை, சின்னச் சின்ன ஸூக்ஷ்மமான தர்மங்களையெல்லாம் இப்போது நாம் மறந்து விட்டோம்.

காஞ்சீபுரத்தில் அம்பாள் தானே இந்தத் தர்மங்களை யெல்லாம் நடத்தி நமக்கு வழி காட்டியிருக்கிறாள். அங்கே அன்னபூர்ணிக்கு ஒரு சந்நிதி இருக்கிறது. இது தவிர காமாக்ஷியே அன்னதானம் மட்டும் இல்லாமல் முப்பத்திரண்டு தர்மங்களையும் செய்திருக்கிறாள். திருவையாற்றிலும் அம்பாள் தர்மஸம்வர்த்தினியாக, அறம் வளர்த்த நாயகியாக இருக்கிறாள்.

மநுஷ்யர்களுக்குள் ஜாதி, யோக்யதை முதலானவைகளைப் பார்க்காமல் உபகாரம் பண்ண வேண்டும் என்பதுமட்டுமில்லை. இம்மாதிரி மனித இனம் மட்டுமின்றி, சகல ஜீவராசிகளுக்கும் சிரமங்கள் தீரவேண்டும் என்று சொல்லித்தான் ரந்திதேவனும் பஞ்சமனுக்குத் தீர்த்தத்தை வார்த்தான்.

இதே போல ஸகல ஜீவராசிகளின் க்ஷேமத்தையும் கோருகிற இன்னொரு சுலோகம் உண்டு. இங்கே ரந்திதேவன் "இந்த ஜலம் எல்லா ஜீவராசிகளின் கஷ்டத்தையும் போக்கட்டும்" என்று சொன்ன மாதிரி, அந்த இன்னொரு சுலோகத்தில், "இந்த தீப ஜ்வாலை பட்டு எல்லா உயிரினங்களும் க்ஷேமத்தை அடையட்டும்" என்று சொல்லியிருக்கிறது. இப்படி 'எல்லா உயிரினமும்' என்று ஒட்டு மொத்தமாகச் சொல்லாமல் ஒவ்வோர் இனமாகப் பிரித்துச் சொல்லி யிருக்கிறது. ரந்திதேவனின் சுலோகத்தில் தண்ணீரைச் சொல்லி யிருக்கிறது; இந்த இன்னொரு சுலோகத்தில் அக்னியின் பிரகாசத்தைச் சொல்லி யிருக்கிறது. அக்னி விஷயமான அந்தச் சுலோகம் கார்த்திகை தீபத்தோடு சம்பந்தப்பட்டது. அதைச் சொல்கிறேன்.

(தொடரும்)



"ஆதென கீர்த்த ஆரம்பத்திலே நாரத முனி ஸ்ரீ வைகுண்ட நாதனைத் தரிசித்து நமது இருபது அம்சத் திட்டம் பற்றி விளக்க, அதுகேட்ட நாராயணன் மனம் குளிர்ந்து..."

"என்ன! மூன்று மணி நேரம் நான் இப்படி ஒற்றைக் காலில் நிற்கிற ஸீன் படம் பிடிக்கப் போறீங்களா?"

"வேறு வழி? சண்டைக் காட்சி, கனவுக் காதல், ஆபாச நடனம், குடி காட்சி எதுவும் எடுப்பதற்கில்லையே!"



புதிய

# உடனடி-உபயோக

# டிக்-20

மண்ணெண்ணை
கலப்பதற்கான
மேற்படி செலவு
கிடையாது!



கலக்க வேண்டிய தொல்லை கிடையாது. திறந்து நேராக உபயோகிக்க வேண்டியதுதான். உடனடியாக மூட்டைப் பூச்சிகளை ஒழிக்கிறது. பிளவுகள், பொந்துகள், மெத்தைத் தையற்குழிகள், ஃபர்னிச்சர் ஜாயிண்டுகள், சுவர்களிலுள்ள சட்டங்களின் அடி பாகங்கள் போன்ற பல இடங்களிலும் புதிய டிக்-20 உபயோகியுங்கள்.

புதிய டிக்-20 இப்போது அதிக பாதுகாப்பானது. வீட்டில் வைக்கலாம். காரணம் அது மீண்டும் புதுப்பிக்கப் பட்ட ஃபார்முலா கொண்டதாகும். முன் கூட்டியே மண்ணெண்ணை கலக்கப்பட்டு உடனடியாக உபயோகிக்க வசதியாக தயாரிக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் புதிய நிர்ணயங்கள்படி உள்ளது. உபயோகிப்போரின் பாதுகாப்பை உறுதி செய்கிறது.




## இன்றே டிக்-20 வாங்குங்கள் இன்றிரவே நன்றாக உறங்குங்கள்.



ஒரு ராலிஸ் இந்தியா தயாரிப்பு

RADEUS/R/T-I




## சுருக்கமாய்ச் சில ...

வாசகர்களைத் தயார்ப்படுத்த சில விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். விஞ்ஞானக் கதை என்பது வேறு ஜாதி. இந்தக் கதைகளை உணர்ந்து கொள்ளக் கொஞ்சம் சிந்தனையை நீங்கள் கூர்மைப் படுத்திக் கொள்ள வேண்டும். மற்றொரு காலத்தில் மற்றொரு சூழ்நிலையில் கதைகள் நடைபெற்றாலும் நாம் அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய உணர்ச்சிகளையும் அவை சொல்லும். மெலிதான சித்தாந்த, தத்துவப் பின்னணிகளும் தென்படும். கதைகளில் சொல்லப்படும் எதிர்காலங்கள் சாத்தியக் கூறுகளே. அவைகளில் சில பயமளிக்கும், சில விநோதமாக இருக்கும். சில சந்தோஷம் தரும்... 'ஆத்மா' 'நித்யா' என்கிற இரு பெயர்களும் சில கதைகளில் திரும்பத் திரும்ப வந்தாலும் அவை ஆண் பெண்ணின் குறியீடுகள். ஒவ்வொரு கதையிலும் அவர்கள் வெவ்வேறு மனிதர்கள்.

முக்கியமாகத் தொடரின் கடைசிக் கதையாக நான் எழுத நினைத்திருக்கும் "தேவன் வருகை" என்கிற கதை வாசகர்களிடமிருந்து ஆழ்ந்த நோக்கை அதிகம் எதிர்பார்க்கிறது. கல்லூரி மாணவ மாணவிகளுக்கு அறிவித்துள்ள போட்டி நல்ல திட்டம். கவனமாக எழுதுகிறேன்!

'சுஜாதா'

## ஒன்பதாவது பெண்

சுஜாதா

இருபது குழந்தைகளும் அழகாக இருந்தார்கள். ஆரோக்கியமாக இருந்தார்கள். சரியாகப் பத்துப் பேர் ஆண்கள்; பத்துப் பெண்கள். எல்லோருக்கும் ஒரே வயது. ஒரே பிறந்த தினம். வகுப்பறைக்குள் பூக்களை இறைத்தது போல் உற்சாகமாகச் சிரித்துக் கொண்டு நுழைந்து உடனே ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு வரிசையாக நின்று கண் மூடி தியானத்தில் சில விநாடிகள் நின்றார்கள்.

"எங்களது அன்றாட வாழ்க்கையை அமைத்து வரும், எங்களுக்கு எல்லாவிதமான பாக்கியங்களும் அளித்து வரும் கம்ப்யூட்டர் தாத்தாவுக்கு இன்றைய வந்தனங்கள்." என்று முணு முணுத்துவிட்டு, "நித்யா, நீங்கள் சுகமா?" என்றார்கள், ஒரே குரலில்.

"சுகம் குழந்தைகளே! வந்தனம்!"

"இன்று என்ன பாடம்?"

"நீங்கள் என்ன படிக்க விரும்புகிறீர்கள்?"

"சரித்திரம்."

"சரி! உங்கள் சாதனங்களை அமைத்துக் கொள்ளுங்கள்."

குழந்தைகள் தத்தம் மெத்தை நாற்காலிகளின் வளைந்த சுகத்தில் பதிந்து காதுகளில் இறங்கும் மெல்லிய ஒலிக் குழாய்களைப் பொருத்திக் கொண்டு எதிரே திரையில் ஆவலுடன் பார்த்தனர்.

நித்யா மானிட்டரில் உட்கார்ந்து 'சரித்திரம்' 'இருபதாம் நூற்றாண்டு' 'ஆறும் வகுப்பு' என்று அடித்தாள் 'தயார்' என்கிற விளக்கு எரிந்தது. 'காட்டு' என்கிற பட்டனைத் தொட்டாள்.

சுவரில் விரவியிருந்த திரையில் பிம்பங்கள் பிரகாசமடைந்து பிரமித்தன. மெலிதான சங்கீதம். மெலிதான வற்புறுத்தும் குரல் ஒன்று!

"இருபதாம் நூற்றாண்டில் மனிதர்கள் காட்டுமிராண்டித்தனமாகவாழ்ந்தார்கள். எலெக்ட்ரானிக்ஸ் யுகத்தின் ஆரம்பத்துக்கு அவர்கள் வித்திட்டாலும் சில தேசங்கள் மட்டும்தான்..."

குறுக்கீடு செய்யும் சிவப்பு விளக்கு எரியப் பாடம் நின்றது. "சந்தேகம் யாருக்கு?" என்றாள் நித்யா. அந்தப் பெண், "தேசம் என்றால் என்ன நித்யா?" என்றாள்.

"அப்போதெல்லாம் உலகத்தைப் பல தேசங்களாகப் பிரித்திருந்தார்கள்."

"எப்படி? பள்ளம் வெட்டியா? சுவர் கட்டியா?"

"இல்லை. அவர்கள் மனத்தினால் பிரித்திருந்தார்கள். மனிதனும் மனிதனும் வைரி என்று நினைத்திருந்தார்கள். வேறு வேறு பாஷை பேசினார்கள். வேறு வேறு சமூக நிலையில் இருந்தார்கள். இது பாடத்தின் பின் பகுதியில் புரியும், உனக்கு."

மறுபடியும் பாடம் தொடர்ந்தது :

''சில தேசங்கள் மட்டும்தான் சந்தோஷம் என்பதின் ஆரம்பத்தை அடைந்திருந்தன. பெரும்பாலானவர்கள் ஆதாரத் தேவைகள் கூடப் பெறாமல் இருட்டிலும் அறியாமையிலும் வியாதியிலும் இருந்தார்கள்.''

ஒரு சாக்கடைத் தெருவின் அருகில் குப்பைக் கூளங்களுக்கு மத்தியில் நிர்வாணமாக ஒரு சிறு குழந்தை நடப்பது திரையில் தெரிந்தது. ''இதுதான் இருபதாம் நூற்றாண்டுக் குழந்தை.''

வகுப்பே தெளிவாகத் தெரிந்த அந்தப் பையனின் . . . . . . .ப் பார்த்துச் சிரித்தது.

''தங்கள் வாழ்வு நிலையை உயர்த்திக் கொள்ளாமல் அவர்கள் ஒருவருடன் ஒருவர் போராடி, ஆகாய விமானம் பீரங்கி போன்ற காட்டுமிராண்டி ஆயுதங்கள் தயாரிப்பதில் தங்கள் சக்திகளையும் நேரத்தையும் விரயம் செய்தார்கள். ஒருவரை ஒருவர் வெறுத்தார்கள். போரிட்டார்கள். கொன்றார்கள்.....''

திரையில் கடுமையான குண்டு வீச்சும் விமானத் தாக்குதலும் பாலங்கள் விண்டு உடைவதும் தூள் பறப்பதும் தெரியக் குழந்தைகள் கைகொட்டி ஆரவாரித்துச் சிரித்தார்கள்.

நித்யாவின் கவனம் மெதுவாக அலைந்தது. பத்து நிமிஷப் பாடம் நடந்தால் ஒரு நிமிஷம் குழந்தைகள் சந்தோஷமடைய வேண்டும். மறுபடியும் பத்து நிமிஷம் பாடம் அல்லது விளையாட்டு.

''காட்டு மிராண்டித்தனமாக ஒருவரை ஒருவர் கல்யாணம் செய்துகொண்டார்கள்..''

சிவப்பு விளக்கு மறுபடியும் எரிய, ''கல்யாணம் என்றால் என்ன நித்யா ?''

''ஆணும் பெண்ணும் ஒன்றுசேர்ந்து பிரியாமல் வாழ்வது.... குழந்தைகளை உண்டாக்குவது.... சண்டை போட்டுக் கொள்வது.. ...பிரிவது...அந்தக் காலத்து வழக்கம்.''

'' புரியவில்லை... ஆணும் பெண்ணும் குழந்தை உண்...''

நித்யாவுக்கும் சரியாகப் புரியவில்லை.... ''விளக்கத்துக்கு அவசியமில்லை. படிக்கலாம்...'' என்றான்.

மறுபடியும் பாடம் தொடர்ந்தது...

ஆம், அவர்கள் காட்டுமிராண்டிகள் தாம். சாக்கடையில் வாழ்ந்தவர்கள் தாம். நாம் இருபத்திரண்டாம் நூற்றாண்டில் எவ்வளவோ மாறிவிட்டோம். எல்லாம் எய்திவிட்டோம். உலக சமாதானம். ஜூபிட்டரில் காலனி. தேசங்கள் கிடையாது. உலக யுத்தங்கள் கிடையாது. ஆயுதங்கள் இல்லை. எவ்வளவு அமைதி. எவ்வளவு சந்தோஷம். எவ்வளவு சுதந்திரம். நித்யாவின் மனம் அலைந்தது. ஏன் இப்படி மெலிதான கேள்வியுடனே எண்ணிக் கொண்டிருக்கிறேன்? எனக்கு ஏதோ உடல் நலம்தான் சரியில்லை. நான் ஏன் கவலைப்படுகிறேன்? இந்த நூற்றாண்டிலே கவலையே இருக்கக் கூடாதே....

தூக்கம் இல்லையா? அதற்கு ஒரு சாதனம். நாக்குக் கேட்கும் ருசிக்குப் பட்டனைத் தட்டினால் சுடச் சுட உணவு.

தனிமையாக இருக்கிறதா ? நட்புத் தேவையா....

சென்ட்ரலுக்கு விவரம் சொன்னால் போதும்.

ஆணா ? பெண்ணா ?

உயரம் ?

நிறம் ?

ஏதேனும் பிரத்தியேக குணாதிசயங்கள்? ஐந்து நிமிடங்களில் கேட்ட அளவுகளுடன்





ஜப்பானிய மொழியில் இப்படிப் போட்டால் 'கங்கிராஜுலேஷன்ஸ்' என்று அர்த்தம். அடுத்த முறை யாரையாவது வாழ்த்த வேணுமானால் இப்படி எழுதி அனுப்புங்கள். அர்த்தமும் கொடுங்கள். வேடிக்கையாக இருக்கும்.

—கே. ஆர். ஆதாரம்: இந்துஸ்தான் டைம்ஸ்

---

குணாதிசயங்களுடன் ஓர் அழகான ஆண் வந்து நிற்பான். 'என் ஆருயிரே' என்பான்.

அப்பாவைப் பார்க்க வேண்டுமா ? ஒரு விரல் நுனியில் திரையில் தெரிவார். 'நித்யா சுகமாக இருக்கிறாயா — உணவு எடுத்துக் கொள்கிறாயா — எல்லாம் நலம்தானே—ஏதாவது வேண்டுமா?' — பதினைந்து நிமிஷங்களில் ஒரு ராக்கெட் பிடித்து வந்துவிடலாம்....

மனத்தில் நினைத்துப் பார்த்தால் போதும். எதுவும் கிடைக்கும். மனத்தின் எல்லை தான் தேவையின் எல்லை. சங்கீதம், நடனம், உடற் சுகம்.... இருந்தும் என்மனம் அலைகிறது. நிச்சயம் எனக்கு உடல்நலமில்லை. அழுகை வருகிறது. குழந்தைகளைத் தவிர வேறு ஒருவரும் அழுவதில்லையே! எனக்கு என்ன குறைவு...என்னிடம் என்ன தப்பு?

''நித்யா! நித்யா!''

பாடம் முடிந்து விட்டதா என்ன ? ''குழந்தைகளே, அடுத்த பாடம் வேண்டுமா, விளையாடச் செல்கிறீர்களா?''

''அடுத்த பாடம்! அடுத்த பாடம் !'' என்ற ஆர்வ கோஷ்டி கானம்.

மானிட்டரில், ''நித்யாவைப் பார்ப்பதற்கு ஒருவர் வந்திருக்கிறார்'' என்ற செய்தி பளிச்சிட்டது. குழந்தைகள் அடுத்த பாடத்தில் 'அதிவேகக் கோட்பாடுகளின் சிக்கலான தத்துவங்க'ளில் ஆழ்ந்திருக்க நித்யா மெதுவாக எழுந்து வெளியே வந்தாள். மௌனமான வகுப்பறைகளைக் கடந்து இள வெளிச்சத்துக்கு வந்தாள். வாயிற்படியில் அவன் உட்கார்ந்திருந்தான். யார் அவன் ?

அவளைப் பார்த்ததும் சிரித்தான். ''என்னை அடையாளம் தெரிகிறதா ? ஒரு தடவை என்னைக் கூப்பிட்டிருக்கிறாய்.''

''ஞாபகம் இல்லை. எத்தனையோ பேரைக் கூப்பிட்டிருக்கிறேன்.''

''என் பெயர் ஆத்மா.''

''அப்படியா ? என்ன வேண்டும் ?''

''உன்னை மறுபடியும் கண்டுபிடிக்க மிகவும் முயற்சி செய்தேன். அன்றைக்குப் பாதியில் விட்டுச் சென்றுவிட்டாய்.''

''என்றைக்கு, எந்தப் பாதி, எதுவும் ஞாபகம் இல்லை, எனக்கு. என்ன வேண்டும் உனக்கு?''

''இன்று மாலை உன்னை என் வீட்டுக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன்.''

'' எதற்கு ?''

''பேசுவதற்கு. பேசினபின் உனக்கு விருப்பம் இருந்தால் என்னுடன் தூங்கலாம். அதற்கு மேலும் விருப்பம் இருந்தால் நாம் இருவரும் "ஒரு வருஷம் சேர்ந்து இருந்து பார்க்கலாம். அப்புறம்...''

''முதலில் நீ யார் ?''

''நித்யாதானே உன் பெயர்? நித்யா, நான் உன்னைப் போல் ஒருவன்.''

''என்னைப் போல் என்றால்...''

'' நானும் இரவில் சில நேரங்களில் அழுகிறேன்.....''

நித்யா பிரமித்தாள். சற்று நேரம் அவனையே பார்த்திருந்துவிட்டு அதன்பின் சிரித்தாள்.

''வருகிறேன்'' என்றாள்.

'' நித்யா, நான் விரும்புவது உன் மனத்தை.''

''அதைத் தனியாகக் கழற்றிக் கொடுத்து விடவா ?''

''அதைத்தான் இன்னும் இவர்கள் கண்டு பிடிக்கவில்லை. மாலை சந்திக்கலாம். நான் பள்ளி மாடியில் வந்து அழைத்துச் செல்கிறேன்'' என்று கூறிச் சென்றான்.

திரும்ப வகுப்பறைக்குச் சென்றபோது நித்யாவின் மனம் எதிர்பார்த்தது. எதிர்பார்ப்பில் ஒரு சந்தோஷம் இருந்தது. இவனும் அவர்களைப் போல் இருக்கலாம்.... இல்லை வித்தியாசமானவனாக இருக்கலாம்... எதிர்பார்க்கலாம்.

**அ**வனுடைய ராக்கெட் கார் சிறிதாக இருந்தது. ஏறக்குறைய அவன் மடியிலேயே உட்கார வேண்டியிருந்தது. அவனிடம் வாசனை சற்று வேறுவிதமாக இருந்தது.

கார் வானத்தில் எவ்விப் பறக்கக் கொஞ்சம் அபாயகரமாகவே செலுத்தினான். நித்யாவின் வயிற்றில் பயம் கவ்விக் கொண்டது. சுகமான பயம்.

**அ**வன் அறைக்கு வந்து மேலுடையைக் கழற்றி மெலிதானபானமும் கானமும் பருகிப் பெரிய படுக்கையில் மல்லாந்தபோது ஆத்மா நின்று கொண்டே அவளைப் பார்த்தான்.

'' நீ பிறந்ததே இப்படித்தானா ?''

''ஆம், ஏன் ?''

''முகம் மாற்றிக் கொள்ளவில்லையா?''

''இல்லை.''

அவன் அருகில் உட்கார்ந்து, ''சொல் !'' என்றான்.

''சில வேளைகளில் எனக்கு மன அமைதி இல்லை. எத்தனையோ கிடைத்தும் எத்தனையோ அடைந்தும்.... சில சமயங்களில் தான் எனக்கு அப்படித் தோன்றுகிறது. மன நிலையத்துக்குச் சென்று வந்தேன். அவர்கள் மாத்திரை தந்தார்கள். மாத்திரை முடிந்ததும் மறுபடி மன அமைதி கலைந்தது... நான் இந்த உலகத்தின் சர்வ வசதிகளையும் உள் மனத்தில் வெறுக்கிறேனோ எனத் தோன்றுகிறது. அதற்கெல்லாம் அப்பால் அல்லது முன்னால் ஒரு துல்லியமான சந்தோஷம் இருக்கிறது என நினைக்கிறேன். என் மனம் அலைகிறது. ஏன் அலைகிறது ? ஏன் சில வேளைகளில் அழுகிறேன் என்பது எனக்குப் புலப்படவில்லை..... உனக்கு...?''

''எனக்கு உன்னைப் பார்த்தபின்...உன்னைப் பார்த்தபின்..... கொஞ்சம் அது குறைந்திருக்கிறது....''

# புதுமையின் பொலிவுக்கு

# ஹமாம்




நறுமணம் சிந்தும் ஹமாம்...
உங்களுக்கும் உங்கள் குடும்ப
முழுமைக்கும் புதுமைப் பொலிவு
வழங்கிடுமாம்...உள்ளத்தில்
குதூகலம் பொங்கிடச் செய்திடுமாம்.

## ஹமாம்

அதிக நாள் நீடித்துழைக்கும்
டாய்லெட் சோப்.

டாம்கோ தயாரிப்பு—
வாங்க நல்லது
விலை குறைந்தது...
வேலையோ சிறந்தது.
தி டாடா ஆயில் மில்ஸ் கம். லிட்.

CMTH-15-172 TM

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

## "அனாஸின் எனக்குப் பெரிதும் உதவுகிறது" என்கிறார் நர்ஸ் ஏஞ்சலா ஃபெர்னாண்டஸ்.



நர்ஸ் ஏஞ்சலா ஃபெர்னாண்டஸ், ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் எதிர்த்து, விரைவில் வலிகளிலிருந்து நிவாரணமளிக்க சக்தி வாய்ந்தது அனாஸின் என்பதைக் கண்டறிந்தவர்.

**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**

பாதிக்கப் பட்டவர்களிட மிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க் கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ சத்துக் குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப்பாற்றலைக் குறைக் கிறது.

**அறிகுறிகள் யாவை?**

உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங் கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும். இருமல், தொண்டைப்புண், பசியின்மை, உடல் சோர்வு, தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**

புறக்கணித்தால் நிமோனியாவிலும் சுவாச கோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவார ணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம், ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள், ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்ய வேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆண்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் 'காற்றோட்டமாக' இருக் கட்டும்.



சக்தி வாய்ந்த, நம்பகமான

**அனாஸின்**

இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி

A 14-6/76

Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.



## ...அவ்வளவுதான்!

பிலிப்பைன்ஸ் நாட்டு ஜனாதிபதி மனைவி இமெல்டா மார்கோஸ் கிட்டத்தட்ட நாட்டின் உபஜனாதிபதி மாதிரி என்று அங்கு சொல்கிறார்கள். இதுபற்றி இமெல்டாவை 'டைம்' நிருபர் கேட்டபோது அவர் சொன்னது — "அவ்வளவு சக்தி எனக்குக் கிடையாது. நான் சொல்லுவேன். நான் சொன்னதை என் கணவர் நிறைவேற்றுவார். அவ்வளவுதான்."—பாபு

(படம்: கணவர் ஓவியத்துக்கருகே இமெல்டா.)

---

"எது?"

"மன அலைச்சல்!"

"எனக்குமா?"

"ஆம்! நாம் இருவரும் ஒரே அலைவரிசையில் இயங்குகிறோம் என நினைக்கிறேன். பிறக்கும் போது ரசாயனம் ஒரே மாதிரி ஏற்பட்டிருக்க வேண்டும். ஒன்று சொல்லட்டுமா? நீ இயற்கையாகப் பிறந்தவள்.... அம்மாவின் கூட்டில் பிறந்தவள்... சரிதானே !"

"சரிதான் !"

"உன் மாதிரி அதிகப் பேர்கள் இல்லை இப்போது."

"நான் ரசாயன அறையில் பிறந்திருந்தால் இந்த மாதிரி எல்லாம் எண்ணமாட்டேன் என்கிறாயா ?"

"ஆம். நித்யா உன் வியாதிக்குச் சரியான மருந்து சொல்லட்டுமா ?"

"என்ன ?"

"சிரிக்கக் கூடாது."

"சிரிக்கவில்லை."

"அதற்குமுன் உடைகளைக் களைந்துவிட்டுச் சற்று தியானம் செய்வேன்." — ஆர்வத்துடன், பரிவுடன் அவன் உடைகளை அவன்...

தடுத்தாள். "வெட்கப்பட வேண்டும் போல் இருக்கிறது."

"வெட்கமா? அது சென்ற நூற்றாண்டுடன் போய்விட்டதே, என்ன இருக்கிறது, வெட்கப் பட? எல்லாம் அனாட்டமி... பாரேன் !"

"வேண்டாம். வெட்கப்பட வேண்டும் என்கிற ஆவல் என் வித்தியாசங்களில் ஒன்று."

"விருப்பம் இருக்கிறதல்லவா ?"

"எதற்கு?"

"தியானம் செய்வதற்கு?"

"தியானம் ! என் மனம் முழுவதும் வியாபித்திருக்கும் வெறுமைக்கு வணக்கங்கள்!

"தியானம்; என் மனம் முழுவதும் வியாபித்திருக்கும் நித்யாவுக்கு வணக்கங்கள்."

"பொய் ! மருந்து சொல்கிறேன் என்றாயே, சொல்."

"உன் கவலைக்கு மருந்து... தாய்மை !"

"சே !"

"சே, இல்லை. உண்மை இதுதான்... நீ தேடுகிற வித்தியாசமான ஒன்று தாய்மை நித்யா. தாய்மை. இந்த நூற்றாண்டில் நீங்கள் தளர்த்திக் கொண்டுவிட்ட தாய்மை.. தாய்மை என்றால் உண்மையான தாய்மை... உன்னுள் ஒரு விதை பதிந்து அது உன் உள்ளேயே வளர்ந்து உன்னிடமிருந்தே பிறந்து, உன் மார்பிலேயே விளையாடி... அதெல்லாம் இப்போது நீங்களே வேண்டாம் என்று சொல்லி உதறிவிட்ட வேதனைகள்.... சந்தோஷங்கள்..... ஆம், வேதனையிலும் சந்தோஷம்... சொல்லு, நித்யா ! முடிவெடுத்தால் போதும் ! அரசாங்கம் உன்னைக் கண்ணாடி போல் பாதுகாத்துப் பரிசோதித்து... அவர்களுக்கு இந்தக் குழந்தைகளும் வேண்டும். கம்ப்யூட்டரைக் கவனித்துக் கொள்ள, உபகிரகங்களைச் சமாளிக்க நெடுந்தூர ராக்கெட்டுகளைச் செலுத்த... எல்லாவற்றுக்கும் இயற்கையாகப் பிறந்தவர்கள் தேவைப்படுகிறார்கள்..... உன் உதரத்தில் ஓர் உயர்தரப் பிரஜையை நீ உண்டாக்கி அவனுக்காக வலித்து, அவனுக்காக ரத்தம் தந்து, அவன் உன்னிலிருந்து புறப்பட அதில் நீ காணும் சந்தோஷம்தான் நீ தேடும் துல்லிய சந்தோஷம்... நித்யா இதுதான் உண்மை. உன் வெறுமையை நான் நிரப்புகிறேன், நித்யா. இனி வருத்தப்படாதே. என் அருகில் வா. நானும் நீயும் சேர்ந்து கொள்ளலாம். நம்மைப் பிரிப்பது இனி கஷ்டம். அலுக்கும் வரை இருப்போம். அலுக்கவே இல்லை என்றால் நூற்றிருபது வருஷங்களும் ஒன்று சேர்ந்தே இருப்போம்.... கல்யாணம் என்பது காட்டுமிராண்டித்தனமான வழக்கமாக இருந்தாலும் இன்றிரவு நாம் ரகசியமாகக் கல்யாணம் செய்து கொள்ளலாம். நாம் தப்பிப் பிறந்தவர்கள்.... இந்த நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் இல்லை...; வா என் காதலியே, என் அருகில் வா!...."

நித்யா ஒரு நிமிடம் தயங்கினாள். தீர்மானித்தாள். ஆம் ! தாய்மை, தாய்மைதான் எனக்குத் தேவை போலும்....அவன் என்னைப் போன்றவன்தான்..... இவனுடன் வாழலாம். இவனிடம் குழந்தை பெற்றுக் கொள்ளலாம்..... முடிவெடுத்து விட்டாள்.

"சற்று நேரம் இரு, குளித்துவிட்டு வருகிறேன்" என்றாள்.

■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■

'' நானும் வருகிறேன். இருவரும் குளிக்கலாம்.''

''வேண்டாம். நீ என் கணவன்.''

அவள் உடல் எங்கும் மெலிதான மின்னல்கள் மின்னின. தண்ணீர் பரிவாக அவளை வருட அவள் உள்ளே இப்போதே ஒரு சிறிய நட்சத்திர ஊசி போல் உணர்ந்தாள்.... என்ன முட்டாள் நான்! இது தெரியாமல் எங்கெல்லாமோ அலைந்திருக்கிறேன்! எதையெல்லாமோ தேடியிருக்கிறேன்.....!''

''துடைத்துக் கொள்ள வேண்டும்!'' என்று கத்தினாள்.

''பக்கத்து அறையில் இருக்கிறது. நான் வரட்டுமா?''

''வேண்டாம்! வேண்டாம்!''

நனைந்த உடலைத் துடைத்துக் கொண்டு... அவன் உடைகளில் ஒன்றையே அணிய விருப்பப்பட்டு அதை அணியும் போது கீழே விழுந்த கடிதத்தை எடுத்தாள்.

மடித்திருந்தது. 'ரகசியம்' என்ற எழுத்துக்கள் ஒளிர்ந்தன..... எதிர்பார்ப்பு அவள் நரம்பில் துள்ளியது. என் கணவன் கடிதத்தைப் பிரித்தால் என்ன? ரகசியம் என்ன, ரகசியம்! கணவன்! என்ன அழகான வார்த்தை! அரசாங்கக் கடிதம்: அல்ட்ரா விஷன் பிரதி. உலக அரசாங்கம் (நாற்பத்தைந்தாம் பகுதி) உள்துறை மக்கட் பகுதி.

உயர் பிரஜைத் திட்டம்...

அன்புள்ள ஆத்மா!

எட்டுப் பெண்களை நீங்கள் அறிந்து கொண்டு அவர்களில் விதைத்தது ஊர்ஜிதப் படுத்தப்பட்டுவிட்டது. இன்னும் ஒரு பெண்ணைக் கர்ப்பப்படுத்திவிட்டால் உங்களுக்குச் செவ்வாய்க் கிரகத்துக்குச் சென்று திரும்ப ஓர் இலவசப் பிரயாணச் சீட்டும், அங்கே உலக அரசின் மகத்தான விடுதியில் பதினைந்து தினங்கள் தங்குவதற்கு எல்லா வசதிகளும் அளிக்கப்படும். வேட்டை தொடரட்டும்.

அன்புடன்,

....................

இயக்குனருக்காக

இணைப்பு: நித்யா என்கிற பெண்ணைப் பற்றி நீங்கள் கேட்டிருந்த விவரங்கள் முழுவதும்....

நித்யா அந்தக் கடிதத்தை மடித்துத் தனக்குள் வைத்துக் கொண்டாள். மெதுவாக அறைக்கு வெளியே வந்தாள்.

''வா, என் வித்தியாசமான மனைவியே!'' என்றான் ஆத்மா.

''ஆத்மா, உன்னிடம் டெர்மினல் இருக்கிறதா?''

''இருக்கிறது. ஏன்?''

அவள் மேல் வைத்த கையை உதறினாள். ''காட்டு. எனக்கு மத்திய அமைதி இலாக்காவுடன் பேச வேண்டும்.''

''புரியவில்லை, நித்யா.''

''புரிந்துவிட்டது ஆத்மா.''

மானிட்டர் திரையில் அதிகாரியின் முகம் தெரிய, ''என்ன வேண்டும், பெண்ணே?'' என்று சிரித்தார்.

'' என் பெயர் நித்யா. என்னை என் வீட்டுக்கு அழைத்துச் செல்ல யாராவது ஒரு பெண்ணை அனுப்ப வேண்டும். என் விருப்பம் இல்லாமல் ஒருவன் என்னைத் தாயாக்க முயற்சி செய்கிறான்!''

''அப்படியா? மிகப் பெரிய குற்றம்! உடனே அனுப்புகிறோம். பதினைந்து செகண்டுகளில். எங்கே இருக்கிறாய்...?''

''என்ன நித்யா இது... நீ விரும்பித் தானே வந்தாய்..... இப்போது என் சர்வ சுதந்திரத்தையும் கெடுத்துவிட்டாயே!''

''புழுவே!'' என்று கடிதத்தை அவன் முகத்தில் எறிந்தாள்.

அமைதிப் படைப் பெண்கள் வந்தபோது நித்யா மெலிதாக விசும்பிக் கொண்டிருந்தாள்.

# அரும்பு அம்புகள்



அமரர் கல்கி

## அத்தியாயம் 25

## விசித்திர வரவேற்பு

சமூக சேவா சங்கத்தின் டென்னிஸ் கோர்ட்டில் பவானியும் மாஜிஸ்திரேட் கோவர்த்தனனும் ஆடிக் கொண்டிருந்தார்கள்.

கல்யாணம் அப்போது அங்கே வந்து, ''மணி ஐந்தரையாகப் போகிறதே! ஒத்திகைக்கு நேரமாகிறதே !'' என்றான்.

''ஒத்திகையை யெல்லாம் நீங்கள் நடத்துங்கள். பவானி அப்புறம் வருவாள்'' என்றார் கோவர்த்தனன்.

''நோ, நோ! பவானி ரொம்ப பங்சுவல். ஐந்தரை மணிக்கு ஒத்திகையென்றால் டாண் ணென்று அந்தலை மணிக்கு வந்துவிடுவாள்'' என்றான் கல்யாணம்.

''வாட் நான்ஸென்ஸ் ! இவளுக்கு எதற்கு ஒத்திகை? நடிக்கத் தெரியாதவர்கள்தாம் திரும்பத் திரும்ப ஒத்திகை பார்த்துக்கொள்ள வேண்டும். நாடகம் என்று அரங்கேறுகிறது என்று நேரம், தேதி சொல்லிவிட்டுப் போ. பவானி பங்சுவலாக வந்து சேர்வாள்!''

'' நீங்க கொடுக்கிற சர்ட்டிஃபிகேட்டைக் கேட்டுத்தான் இவளுடைய நடிப்பாற்றலை நான் புரிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. எனக்கு ஏற்கனவே தெரிந்ததுதான். இவளை நான் அழைப்பது மற்றவர் நடிப்பை அபிவிருத்தி செய்ய.''

'' ஓ ! கதாநாயகியாக நடிக்குமாறு அழைத்துவிட்டு இப்போ டைரக்ஷன் பொறுப்பையும் இவள் தலையிலே கட்டியாகிவிட்டதா? இன்னும் கதை, வசனம், பாட்டு, இசை எல்லாம் பவானிதானா ? மற்றவர்கள் எல்லாம் சேர்ந்து திரை தூக்கி இறக்குவீர்களாக்கும் ?''

இதற்குள் பவானி குறுக்கிட்டு, ''அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. ஏதோ என்னால் முடிந்த அளவு உதவுகிறேன். எல்லாருடைய ஒத்துழைப்பும் வேண்டும், நாடகம் வெற்றி பெற. மாஜிஸ்திரேட் ஸாரின் ஒத்துழைப்பும் கூட அவசியம் தேவை'' என்றாள்.

''நான் என்ன செய்யணும், சொல்லு'' என்றார் மாஜிஸ்திரேட்.

''அபத்தமான முறையில் குற்றம் குறை சொல்லாமல், முட்டுக்கட்டை போடாமல் இருந்தால் அதுவே பெரிய உதவி '' என்றான் கல்யாணம்.

''இப்போது நீதான் எங்கள் விளையாட்டுக்கு முட்டுக்கட்டை போட்டிருக்கிறாய்'' என்றார் கோவர்த்தனன்.

''ஐ ஆம் ஸாரி கல்யாணம். இந்த ஸெட்டை முடித்துக் கொண்டு வந்துவிடுகிறேன். ஐந்தே நிமிஷம்'' என்றாள் பவானி.

'' சீக்கிரம் முடியணும் என்பதற்காக விட்டுக் கொடுத்து ஆடாதீர்கள்'' என்றான் கல்யாணம். தொடர்ந்து அவள் பந்தைத் தட்டிய போதெல்லாம், ''ஒண்டர்ஃபுல் ஷாட்'', ''பியூட்டி'', ''ஸ்பிளெண்டிட்'' என்றெல்லாம் உற்சாகப்படுத்தினான். மாஜிஸ்திரேட் ஆடியபோது மௌனம் சாதித்தான்.

மெய்யாலுமே பவானி பிரமாதமாகத்தான் ஆடினாள். ஆனால் எதிராளியின் பலத்துக்கு அவளால் ஈடு கொடுக்க முடியவில்லை. களைப்புடன் ஒரு 'ஷாட்' அடித்த சமயம் அது கோர்ட்டைவிட்டு வெகுதூரம் திசை தப்பிப் போய் விழுந்தது.

கல்யாணம் பலமாகக் கைதட்டி ''எக்ஸலண்ட்'' என்றான்.

'' எதற்குக் கைதட்டுகிறீர்கள் ? எனக்குத்தான் ஆட்டம் போய்விட்டதே '' என்றாள் பவானி.

''ஆட்டமும் போய்விட்டது, அத்துடன் பந்தும் போய்விட்டது. நாம் நாடக ஒத்திகைக்குப் போகலாம்.''

மாஜிஸ்திரேட் மரத்தடி நாற்காலிகளைக் காண்பித்து, ''ஒரு கப் டீ சாப்பிட்டுவிட்டுப் போகலாம், பவானி!'' என்றார்.

'' வேண்டாம், ஸார் ! 'புரொட்யூஸ'ருக்குக் கோபம் வந்துவிடும். அப்புறம் அடுத்த நாடகத்தில் எனக்கு 'சான்ஸ்' தர மாட்டார். கதாநாயகிக்கு வேறு யாரையாவது 'புக்' பண்ணி விடுவார்'' என்று சிரித்துக் கொண்டே கூறிய பவானி, டர்க்கி

டவலால் முகத்தை ஒற்றிக் கொண்டு கல்யாணத்துடன் நடந்தாள்.

மாஜிஸ்திரேட் கோவர்த்தனன் மரத்தடி நாற்காலியில் அமர்ந்தார். பையன் வந்த போது அவர் வழக்கம்போல் டீ அல்லது லெமனேட் 'ஆர்டர்' செய்யவில்லை. விஸ்கி, சோடா கொண்டு வரச் சொன்னார் !

ஒத்திகை முடிந்து பவானி புறப்பட்ட போது கல்யாணம், ''என்னை வீட்டில் விட்டு விட்டுப் போகிறீர்களா ?'' என்று கேட்டான்.

'' ஏன் உங்க கார் என்ன ஆயிற்று ?'' என்றாள் பவானி.

''அதற்கு உங்க புதுக் கார் பக்கத்தில் வந்து நிற்க வெட்கமாயிருக்கிறதாம். காலையில் ஷெட்டைவிட்டுப் புறப்படமாட்டேன் என்று ஒரே பிடிவாதம் !''

''பொய்! தனித்தனியே நாம் போனால் வம்பளக்க முடியாது. அதனால் உங்கள் காரை வீட்டிலேயே விட்டுவிட்டு வந்திருக்கிறீர்கள்.''

''உண்மைதான் பவானி! உங்களுடன் தனியே மனம் விட்டுச் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தால்தான் இரவு எனக்குத் தூக்கமே வருகிறது'' என்று கூறிய கல்யாணம் காரின் முன்புறம் போய் ஏறிக் கொண்டான்.

சமூக சேவா சங்கத்தின் வெளி மதிலைத் தாண்டியதும் பவானி கேட்டாள் : ''அந்தப் பெண் கமலா கிணற்றில் விழுந்துவிட்டாளாம். நீங்கள் காப்பாற்றினீர்களாமே?''

''ஆமாம். அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது ?''

''மிஸ்டர் கல்யாணம், ராமப்பட்டணம் ரொம்பச் சின்ன ஊர். இங்கே நேதாஜி டில்லி செங்கோட்டையைப் பிடித்தார் என்பதாகப் பத்திரிகையில் செய்தி படிக்க நேர்ந்தால்கூட ஒருவித சலசலப்பும் இராது. கிணற்றில் விழுந்த கமலாவைக் கல்யாணம் காப்பாற்றினார் என்றால் பெரிய பரபரப்பு ஏற்படும். காட்டுத் தீ போல் அந்தச் செய்தி பரவும் !''

''அது சரி, நீங்க இப்போ எங்கே போகிறீர்கள்?'' என்றான் கல்யாணம், பவானி மாற்றுத் திசையில் காரைத் திருப்புவதைப் பார்த்துவிட்டு.

''கமலாவின் வீட்டுக்குத்தான்.''

'' எதற்கு?''

''சரிதான். அந்தப் பெண் கிணற்றில் விழுந்து சாகப் போனவள், புனர்ஜென்மம் எடுத்திருக்கிறாள், அவளை நான் பார்த்து ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் சொல்ல வேண்டாமா ?''

கல்யாணம் தலையாட்டிச் சம்மதித்தான்.

அங்கே அவர்களுக்கு ரொம்ப விசித்திரமான வரவேற்பு காத்திருந்தது. கமலாவைக் கண்ணிலேயே காணோம். வந்தவர்களைப் பார்த்துக் காமாட்சி அம்மாள், '' என்ன இரண்டு பேருமாகச் சேர்ந்து எங்கே இப்படிக் கிளம்பினீர்கள்?'' என்று பாதி கிண்டலாகவும் பாதி அலட்சியமாகவும் கேட்டாள்.

'' உங்க பெண் கிணற்றில் விழுந்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன்...'' என்று பவானி ஆரம்பிப்பதற்குள்.

''ஆமாம், விழுந்து விட்டாள். அப்படியே போயிருந்தால் தேவலாம். ஒரு கவலைவிட்டிருக்கும். ஏழைகளுக்கெல்லாம் பெண்ணும் பிறக்கக் கூடாது. பிள்ளையும் இருக்கக் கூடாது'' என்றாள் காமாட்சி.

'' என்னடி வந்தவர்களை 'வா' என்று சொல்லாமல் ஏதேதோ உளறுகிறாய் '' என்றார் மாசிலாமணி.

''கமலா எங்கே ?'' என்றாள் பவானி.

'' உடம்பு சுகமில்லை. காமிரா அறையில் இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்திருக்கிறாள்.''

''ஒன்றுமில்லை, தலைவலியும் குளிர் காய்ச்சலும்தான். நாளைக்குச் சரியாகிவிடும் '' என்றார் மாசிலாமணி.

'' டாக்டர் என்ன சொல்கிறார் ?''

''டாக்டர் எங்கே வந்து பார்த்தார் ? அவர் வருவதானால் சும்மா வருவாரா ? பணத்துக்கு எங்கே போகிறது ?''

'' ஒரு வார்த்தை விகளிடம் சொல்லி அனுப்பியிருந்தால் நான் அழைத்து வந்திருப்பேனே ?'' என்றான் கல்யாணம்.



மணியம் செல்வன்

''வேண்டாம், வேண்டாம்! எதற்கு உங்களுக்குச் சிரமம்? ஏற்கனவே நாங்கள் உங்களுக்கு ரொம்பத் தொந்தரவு கொடுத்து விட்டோம். எனக்குத் தெரிந்த சுக்கு திப்பிலி வைத்தியம் பண்ணுகிறேன். சரியாகிவிடும்.''

''பவானி! வாருங்கள், போகலாம்'' என்றான் கல்யாணம். அவன் அங்கே ஒரு விநாடி தாமதிக்கவும் விரும்பவில்லை.

''ஆமாம், ஆமாம். புறப்படுங்க, உங்களுக்கு மாஜிஸ்திரேட் கோர்ட்டு, டென்னிஸ் கோர்ட்டு, நாடகக் கோர்ட்டு என்று ஏகப் பட்ட வேலை'' என்றாள் காமாட்சி.

''கல்யாணம்! நீங்க காருக்குப் போங்க. நான் ஒரு நிமிஷம் கமலாவைப் பார்த்துவிட்டு வந்து விடுகிறேன்'' என்றாள் பவானி. பிறகு காமாட்சியின் அனுமதிக்குக் காத்திராமல் காமிரா அறைக்குள் போய்த் தரையில் பாயில் படுத்திருந்த கமலாவை அணுகினாள்.

''கமலா, இப்போ எப்படி இருக்கிறது ?''

''எனக்கு ஒன்றும் இல்லை'' என்றாள் கமலா நறுக்கென்று.

பவானி அவள் கழுத்தில் கரம் வைத்தாள். ஜுரம் இருக்கிறதா என்று பார்க்க. சரேலென்று அதை உதறிவிட்டுத் கமலா தலையையும் சேர்த்து இழுத்துப் போர்த்திக் கொண்டு சுவர் பக்கம் திரும்பிக் கொண்டாள்.

'' கமலா ! என்னிடம் உனக்கு என்ன கோபம், திடீரென்று ?''



"எனக்கு யார் மீதும் ஒரு கோபமும் இல்லை. என்னைப் படைத்த கடவுளிடம்தான் எனக்குக் கோபம்."

"கமலா! உன் மனசை யாரோ ஏதோ சொல்லிப் புண்படுத்தியிருக்கிறார்கள். என்னுடன் உனக்குப் பேசப் பிடிக்கவில்லையானால் வேண்டாம், நான் வருகிறேன். ஆனால் நான் எப்போதும் உன் நலனை நாடுகிறவள்; என்னிடம் நீ கோபப்படுவதில் அர்த்தமில்லை. இதை இப்போது நீ புரிந்து கொள்ளாவிட்டாலும் சீக்கிரமே உணர்வாய்!"

மளமளவென்று இதைச் சொல்லிவிட்டு வேகமாகக் கிளம்பிய பவானி, மாசிலாமணி தம்பதியைத் திரும்பிக்கூடப் பாராமல் வாசலுக்குச் சென்றாள். காரில் ஏறிக் கொண்டு அதைக் கிளப்பினாள்.

## அத்தியாயம் 26

# நீரில் மிதந்த விழிகள்

சற்றுத் தூரம் போகும் வரை இருவரும் பேசவில்லை. பிறகு இருவரும் ஒரே சமயத்தில், "ஏன் இவர்கள் இவ்வளவு மோசமானவர்களாக..." என்று பேச்சை ஆரம்பித்தார்கள். உடனேயே இருவரும் மற்றவர் பேச அனுமதித்து வாக்கியத்தைப் பாதியில் நிறுத்திக் கொண்டார்கள். மீண்டும் இருவரும் ஒரே சமயத்தில், "என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டார்கள்.

இதையடுத்து இருவருக்கும் சிரிப்பு வந்துவிட்டது. பலமாகச் சிரித்த பவானி, ஒருவாறு அது ஓய்ந்ததும், "சிரிக்கவே கூடாது, நான். அந்தப் பெண்ணைப் பார்த்தால் அத்தனை பரிதாபமாக இருக்கும்போது நான் சிரிப்பதே பாவம்" என்றாள். அப்புறம் முதலில் கேட்க ஆரம்பித்துப் பாதியில் நிறுத்திய கேள்வியை மீண்டும் கேட்டாள்: "ஏன் இப்படி இவர்கள் இவ்வளவு மோசமாகத் திடீரென்று நடந்து கொண்டார்கள்?"

"விட்டுத் தள்ளுங்கள், அநாகரிகமான ஜனங்கள். படிப்புக் கிடையாது, நாகரிகம் கிடையாது, நல்ல மனிதர்களோடு பழக்கம் கிடையாது. தெரிந்த லட்சணம் அதுதான்" என்றான் கல்யாணம்.

"அதொன்றுமில்லை. நேற்று வரை நல்லபடியாகத்தானே நடந்து கொண்டார்கள்?"

"தரித்திரமும் கஷ்டமும் இப்போது அதிகமாகிவிட்டது. அது காரணமாயிருக்கலாம்."

"இந்தக் குடும்பத்தைப் பார்த்தால் எனக்கு 'ஐயோ பாவம்' என்றிருக்கிறது. நீங்கள் ஏதும் உதவி செய்யக் கூடாதா?"

"ஓரளவுக்குத்தான் உதவலாம். எவ்வளவுதான் செய்ய முடியும்? ஒரு குடும்பத்தை என்றென்றைக்கும் தாங்குவது சாத்தியமா? அவரவர் காரியத்தை அவரவர்தான் பார்த்துக் கொள்ள வேண்டும்."

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது."

"என்ன யோசனை?"

"நீங்கள் அந்தப் பெண் கமலாவைக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டால் அவர்கள் கஷ்டமெல்லாம் தீர்ந்துவிடும்."

"என்ன விளையாடுகிறீர்கள்?"

"விளையாட்டு என்ன வந்தது? உங்களுக்கோ இன்னும் கல்யாணம் ஆகவில்லை. அந்தப் பெண்ணோ கஷ்டப்படுகிறாள். ஒவ்வொரு சமயம் அந்த அம்மாள் கமலாவை நடத்துவதைப் பார்த்தால் சொந்தத் தாய் இல்லையோ, மாற்றாந் தாயோ என்றுகூடத் தோன்றுகிறது."

"நானும் அப்படி நினைத்ததுண்டு. ஆனால் தரித்திரத்தின் கொடுமைதான் அப்படியெல்லாம் பேசச் சொல்கிறது என்று சமாதானப்படுத்திக் கொண்டேன்."

"ஏதாவது இருக்கட்டும். நான் சொன்னபடி நீங்கள் செய்தால் நல்லது. கமலாவும் ரொம்ப நல்ல பெண். கண்ணுக்கு லட்சணமாய் இருக்கிறாள். உங்கள் தாயாருக்கும் அதிகமாகப் படிக்காத, குடும்பப் பாங்கான பெண்தான் நாட்டுப்பெண்ணாக வரவேண்டும் என்று ஆசை. போதாக்குறைக்கு அவளை நீங்கள் கிணற்றிலேயிருந்து எடுத்துக் காப்பாற்றியிருக்கிறீர்கள்!"

"அதனாலே என்ன? ஒரு பெண்ணைக் கிணற்றிலிருந்து எடுத்துக் காப்பாற்றிய குற்றத்துக்காக நான் கழுத்திலே கல்லைக் கட்டிக் கொண்டு கடலிலே விழ வேண்டுமா?"

"சேச்சே! அப்படிச் சொல்வேனா? 'சம்சார சாகரத்தில் கமலாவுடன் கரம் கோத்துக் கொண்டு இறங்குங்கள்' என்றுதான் சொல்கிறேன்."

'' இதோ பாருங்கள்! கமலா வேணு மானல் மறுபடியும் என் எதிரேயே கிணற்றில் விழட்டும். நான் காப்பாற்றாமல் கையைக் கட்டிக் கொண்டு நிற்கிறேன். ஏதோ மனிதாபிமானத்துடன் நடந்து கொண்டதற் காக எனக்கு இத்தனை பெரிய தண்டனையைக் கொடுக்காதீர்கள்!''

''கல்யாணம் என்றால் உங்களுக்கு அவ் வளவு வெறுப்பா? எனக்குத் தெரியாமல் போச்சே. எனக்கும் கல்யாணத்தின் பேரில் வெறுப்புத்தான்!''

'' என்னது? உங்களுக்கு என் மேலே வெறுப்பா?'' என்றான் கல்யாணம் பொய்க் கோபத்துடன்.

பவானி சிரித்தாள். ''இல்லே, இல்லே! 'உங்களைப் போலவே எனக்கும் திருமணத்தின் மீது வெறுப்பு' என்று சொல்லி இருக்க வேண்டும்.''

''உங்கள் நிலைமை எப்படியோ, எனக் கொன்றும் திருமணத்தின் மீது வெறுப்பில்லே. என் பெயரே கல்யாணம் என்றிருக்கும்போது தாலி கட்டத் தயங்குவேனா? என் மனசுக்கு உகந்த பெண்ணாயிருக்க வேண்டும் என்ற ஒரே ஒரு நியாயமான நிபந்தனைதான்.... உதாரணமாய் நாம் இரண்டு பேரும்தான் இருக்கிறோம்.... சும்மா ஓர் உதாரணத் துக்கு.... பேச்சுக்குச் சொல்கிறேன்.''

''பேச்சுக்குக்கூடச் சொல்ல வேண்டாம். எனக்குக் கல்யாணம் என்றால் ரொம்ப வெறுப்பு. அதை மறக்காதீர்கள்'' என்றாள் பவானி.

கல்யாணம் அவள் குரலில் எட்டிப் பார்த்த கடுமையைப் புரிந்து கொண்டு மௌன மானான். இதற்குள் அவன் வீடு வந்து விட் டது. கதவைத் திறந்து கொண்டு இறங்கப் போனவனை, ''மிஸ்டர் கல்யாணம்'' என்ற கனிவான அழைப்பு தடுத்து நிறுத்தியது.

'' என்ன சொல்லுங்கள்!''

'' கமலா கிணற்றில் விழுந்தாளே, எப்படி?''

'' தாம்புக் கயிறு ஜகடையில் சிக்கிக் கொண்டதாயும் அதை விடுவிக்கக் கிணற்று மதில் மீது தான் ஏறியதாகவும் தடுமாறி விழுந்ததாகவும் சொன்னாள்.''

'' சுத்தப் பொய்!''

''என்னது!''

''ஆமாம் அது சுத்தப் பொய்யாகத்தான் இருக்க வேண்டும். நான் சொல்கிறேன், அவள் உங்கள் குரலே வாசலில் கேட்டுவிட்டு வேண்டுமென்றே, ''ஐயோ!'' என்று அலறிய படி கிணற்றுக்குள் குதித்திருக்கிறாள்!''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''பாம்பின் கால் பாம்பறியும்! பெண் மனத்தைப் பெண்ணால்தான் புரிந்து கொள்ள முடியும். உங்களால் காப்பாற்றிக் கரை சேர்க்கப்பட வேண்டும் என்று ஆசைப்பட்டு அதற்காக வேண்டும் என்றே கிணற்றில் விழுந்திருக்கிறாள். கல்யாணம் உங்கள் மீது உயிரையே வைத்திருக்கும் அந்தப் பெண் ணுக்கு ஏமாற்றம் அளிக்காதீர்கள்!''

கல்யாணம் கீழே இறங்கிக் கதவைச் சாத்தினான். பிறகு குனிந்து ஜன்னல் வழியே பவானியைப் பார்த்தான். பூரண சந்திர வின் பாலொளி அவள் முகத்தை மற்றொரு சந்திரனாகப் பிரகாசிக்கச் செய்து கொண் டிருப்பதைக் கண்டான். அந்த மதிவதனத்தி லிருந்து தன் விழிகளைப் பெயர்க்காமல் பேசி னான்: ''கமலாவைப் போலவே நானும் தான் ஒருவர் மீது உயிரையே வைத்திருக் கிறேன். ஆனால் அந்த ஒருத்தி கமலாவாக இல்லையே நான் என்ன செய்ய?'' என்று கேட்டான்.

நான்கு விழிகள் நீரில் மிதந்தன.

(தொடரும்)

---

## ஆசார்யாள் ஜயந்தி விழா

இந்து தர்ம மன்றம் காஞ்சிப் பெரியவர்களின் 83வது ஜயந்தி விழாவை மயிலை ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் இரண்டு நாட்கள் விமரிசை யாகக் கொண்டாடியது.

முதல்நாள் விழாவில் ஆந்திரப்பிரதேச அறநிலைய மந்திரி ராஜாசாகி சூர்யநாராயண ராஜு தொடக்க உரை நிகழ்த்தினார். சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி திரு வி. பாலசுப்ரமணியம் தலைமை வகித்தார். திரு கருப்பையா மூப்பனாரும் பேசினார்.

இரண்டாம் நாள் விழா நீதிபதி சூர்யமூர்த்தி தலைமையில் தொடங்கியது. ரா. கணபதி அவர்களின் 'காமகோடி-ராமகோடி' நூலின் அருமையைத் திரு இ. சந்திரசேகரன் எடுத்துச் சொல்லி, முதல் பிரதி யைத் திரு வைத்திய சுப்பிரமணிய அய்யரிடம் வழங்கினார். சங்கீத கலாநிதி செம்மங்குடி ஸ்ரீ சீனி வாசய்யர் ஆசார்யாள் பெருமையை எடுத்துச் சொன்னதோடு காஞ்சிப் பெரியவர்கள் ஆரம்பித்து வைத்த பிடியரிசித் திட்டத்தில் அனைவரும் பங்கு கொள்ள வேண்டும் என்றும் கோரினார். தமிழகப் பரீட்சை டைரக்டர், ஒவ்வொருவரும் வெள்ளியன்று கோவிலுக்குப் போகும் பழக்கத்தை வைத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இந்து தர்ம மன்றக் காரியதரிசி திரு வி. மீனாட்சி சுந்தரம் இவ் விருநாள் விழாவும் சிறப்பாக அமைய எடுத்துக் கொண்ட முயற்சி பாராட்டுக்குரியது.



**படம்:** திரு ரா. கணபதிக்குப் பொன்னாடை போர்த்தினார் திரு வைத்திய சுப்பிரமணிய அய்யர்.

xxxxxxx:xxxxxxx:xxxxxxx

## சதாபிஷேகம்



திருமதி பொன்னம்மாள் — திரு ஆர். குளத்து அய்யர்

எங்களது தகப்பனாரின் சதாபிஷேக வைபவம் 17-6-1976ம் தேதி பழனியில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் நேரில் கலந்து கொண்டு சிறப்பாக நடத்திக் கொடுத்த உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும், எங்களது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

கே. சுப்பிரமணிய அய்யர்- ஆனந்தவல்லி
கே. ராமய்யர் – லக்ஷ்மி
கே. மகாதேவன் – சீதாலக்ஷ்மி
கே. கிருஷ்ணன் – பவானி
கே. லலிதா மகாதேவன்

உரிமையாளர்கள் :

ஸ்ரீ ஷண்முகானந்த பவான் போர்டிங் & லாட்ஜிங் & ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்வாமி கேண்டீன், பழனி

xxxxxxx:xxxxxxx:xxxxxxx



செய்தபோது நான் எதிர்பார்த்த படியே அவருக்கு க்ஷயரோகம் தான் என்று தெளிவாகத் தெரிந்தது. நான் ராமதாஸிடம் அவர் நோய்பற்றி விளக்கிக் கூறியதும், ''எனக்கு டி. பி.யா டாக்டர்?'' என்று பதைத்தவாறே கேட்டார்.

''இதற்கு ஏன் இவ்வளவு பயப்படுகிறீர்கள்? இப்போது தான் நோய் ஆரம்பமாகியுள்ளது. நுரையீரலில் இலேசாக அரித்துள்ளது. மருந்து சாப்பிட்டால் நீங்கள் குணமடைந்துவிடுவீர்கள். ஸ்ட்ரெப்டோமைசின் ஊசி போட்

தமிழ்நாடு க்ஷயரோக நிவாரண சங்கத்தின் ஆண்டு விழாவில் தமிழக ஆளுநர் திரு கே. கே. ஷா 'டி. பி. ஸீல்' விற்பனையைத் தொடங்கி வைக்கிறார்.

# குணமாகும், கவலை வேண்டாம்!...

திரு ராமதாஸ் என் எதிரில் இருந்த ஸ்டூலில் அமர்ந்ததும் கூறினார்: ''ஒரு மாதமாகவே ரொம்பவும் களைப்பாக இருந்து வருகிறது. அடிக்கடி சளி பிடித்துக்கொண்டு இருமுகிறது. ஒரு வாரமாகத் தினமும் மாலையில் காய்ச்சல் வந்து விடுகிறது. கண்ணில் ஒரே எரிச்சல். பசியும் வழக்கம்போல் இல்லை. எப்போதும் படுத்துக் கொண்டே இருக்க வேண்டும் போல் இருக்கிறது. காய்ச்சல் வர ஆரம்பித்த பிறகு இரண்டு நாட்கள் ஆஸ்பிரின் மாத்திரைகள் சாப்பிட்டேன். இன்று மீண்டும் ஜுரம் வந்திருப்பதால் இனிமேல் இப்படியே நாட்களைக் கடத்தக் கூடாது என்று உங்களிடம் வந்தேன்.''

நோயாளியை ஸ்டெதாஸ்கோப் மூலம் பரிசோதித்தவாறே ''இருமும்போது இரத்தம் வெளிப்படுகிறதா?'' என்று கேட்டேன்.

''இல்லை, டாக்டர்!''

''உங்களுக்கு மறுபடியும் நாளை மாலை காய்ச்சல் வந்தால் இதோ — இந்த மாத்திரையைச் சாப்பிடுங்கள். இது நாளைக்கு மட்டும்தான். நாளையே நீங்கள் இரத்தப் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். மார்புப் பகுதியை எக்ஸ்-ரே படம் எடுத்துக் கொள்ள வேண்டும். அது தவிர நகராட்சி மன்றத்துக்குச் சென்று ஒரு சிறிய பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். மான்ட்டு டெஸ்ட் என்று பெயர். பயப்பட வேண்டாம். எறும்பு கடிக்கிற மாதிரி சில நிமிடங்களுக்கு மட்டும் இலேசாக வலிக்கும். இந்தச் சோதனைகளை யெல்லாம் செய்து கொண்டு நாளை மறுநாள் வாருங்கள்'' என்று கூறி, குறிப்பிட்ட சோதனைகளுக்குச் சீட்டு எழுதிக் கொடுத்தேன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ராமதாஸ் நான் குறிப்பிட்டிருந்த பரிசோதனைகளின் முடிவுகளுடன் திரும்ப வந்தார். அவற்றையும் எக்ஸ்ரே படத்தையும் பரிசீலனை டுக் கொள்ள வேண்டும். ஐ. என். எச். மாத்திரைகள் எழுதிக் கொடுக்கிறேன். தவறுமல் சாப்பிட வேண்டும். நீங்கள் முட்டை சாப்பிடுவீர்களா?''

''சாப்பிடுவதற்கு ஆட்சேபணை இல்லை.''

''அப்படியானல் தினமும் ஒரு முட்டையும், பால், கீரைமுதலிய நல்ல புஷ்டியான உணவும் சாப்பிட்டு வாருங்கள். ஒரு வாரம் கழிந்து வாருங்கள். உங்கள் எடையையும் அவ்வப்போது சோதித்துக் கொள்ள வேண்டும்.''

**''இந்நோய் குணமடைய எவ்வளவு காலம் ஆகும், டாக்டர்?''**

''அநேகமாக ஆறு மாதங்களில் குணம் தெரியும். அதிகபட்சம் ஒரு வருடத்துக்குள் நோய் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். ஆனல், ஓர் எச்சரிக்கை. உடம்பு சற்றுக் குணமானவுடன் அடிக்கடி சினிமா, நாடகத்துக் கெல்லாம் போகக் கூடாது. நல்ல காற்றோட்டமான அறையில் ஜன்னல் கதவுகளைத் திறந்து வைத்துக் கொண்டு இரவில் தூங்க வேண்டும். மாலையில் உலாவப் போகலாம். வீட்டில் குழந்தைகள் இருந்தால்

---

அப்பா பையனுக்கு உபதேசம் செய்தார்: ''வாழ்க்கையில் பொறுமை அவசியம். எதையுமே அமைதியுடனும், அன்புடனும் அணுக வேண்டும். இதோ பார், என் மூக்கு நுனியில் ஒரு பெரிய ஈ உட்கார்ந்திருக்கிறது. கையால் அதைத் தட்டிவிடக் கூடாது. அன்புடன், ''ஈயே, போ, போய் விடு'' என்று... அட! சனியனே, தரித்திரம், அம்மாடி, வலிக்கிறதே. அது ஈயல்ல; தேனீ. கொட்டிவிட்டதே. அது நாசமாய்ப் போக....''

-- ஆர்.எம்.

அவர்களைத் தூக்கிவைத்துக் கொண்டு கொஞ்சுவது. முத்தம் கொடுப்பது இதையெல்லாம் தவிர்க்க வேண்டும். உங்கள் நோய் வீட்டில் உள்ள மற்றவர்களுக்குப் பரவாமல் தடுக்க இந்த முன்னெச்சரிக்கை அவசியம்.''

**''இந்நோய் எப்படிப் பரவுகிறது?''**

''டியூபர்குலோஸிஸ் கிருமிகளால் காற்றின் மூலம் பரவுகிறது. டி. பி. நோயாளி இருமுகையில் லட்சக் கணக்கான கிருமிகள் வெளிப்பட்டுக் காற்றில் கலந்துவிடும். எச்சிலைக் கண்ட இடங்களில் துப்பினால் அது காய்ந்த பின் அதிலுள்ள கிருமிகள் காற்றில் கலந்துவிடும். டி. பி. நோயாளி இருமல் வரும்போது கைக் குட்டையினால் வாயை மூடிக்கொள்வது நல்லது.''

**''சிறு குழந்தைகளுக்கும் இந்நோய் வரும் வாய்ப்பு உண்டா?''**

''சிறு குழந்தைகளுக்கு இந்நோய் வந்தால் அதனை 'பிரைமரி காம்ப்ளெக்ஸ்' என்கிறோம். எந்த வயதானாலும் வியாதி முற்றிப் போகும் முன் சிகிச்சை செய்து கொண்டால் பூரணமாகக் குணமடைந்து விடலாம்.''

**''உடலின் எப்பகுதியை இது தாக்கும்?''**

''பெரும்பாலும் நுரையீரல்தான் அதிகம் பாதிக்கப்படுகிறது. எனினும் தலை முதல் கால் வரை எந்தப் பகுதியிலும் இது இடம் பெறக் கூடும். நோய் முற்றிய நிலையில் நுரையீரல் வெகுவாகப் பாதிக்கப்பட்டாலும் அந்த உறுப்பு விரிவடையத் தனிச் சிகிச்சை (*Lung. expansion treatment*) உண்டு. அறுவைச் சிகிச்சை சிலருக்குத் தேவைப்படலாம்.

**டாக்டர் எஸ். கோவிந்தராஜன் கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.**

# சீனா!

■ சீனாவில் கல்லூரிப் படிப்பு மூன்று ஆண்டுகள் தான். முடிவில் பரீட்சை கிடையாது. அப்படியே இருந்தாலும் கேள்வித் தாள்களை வீட்டுக்கு எடுத்துப் போய் எழுதிக் கொண்டு வரலாம்.

■ அங்கு மக்கள் தங்களுக்கு வசதி இல்லையே என்று கவலைப்படுவது கிடையாது. ஆண்களுடைய பெரிய குறிக்கோள் ஒரு சைக்கிள் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது. அதே போல் பெண்கள் குறிக்கோள் ஒரு தையல் மெஷின் வாங்கிக் கொள்ள வேண்டும் என்பது.

■ அங்கு எம். பி. பி. எஸ். போன்ற பட்டப் படிப்பு மூன்று ஆண்டுகள்தான். இதைத் தவிர மூன்று மாதப் பயிற்சி கொடுத்து நிறைய 'வெற்றுக் கால்' (barefoot) டாக்டர்கள் அங்கு இருக்கிறார்கள்.

■ சீனாவில் திருட்டு, லஞ்சம், வழிப் பறி கிடையாது. ஹோட்டல்களில் அறைகளுக்குச் சாவி கொடுப்பதே கிடையாது. வெளியே போகும்போது கதவைப் பூட்டாமலே போகிறார்கள்.

■ அங்கு வேலையில்லாதவர் எண்ணிக்கை மிகவும் குறைவு. 1951ம் ஆண்டுக்குப் பிறகு விலைவாசிகள் ஏறவேயில்லை. பண வீக்கம் கேள்விப்படாத ஒன்று.

■ எல்லோரும் ஒரே மாதிரியாக நீல நிற உடை அணிகிறார்கள். ஒரே மாதிரியாகக் கிராப் வெட்டிக் கொள்கிறார்கள்.

■ கல்லூரியில் சேரும் மாணவர்கள் அதற்குமுன் கிராமங்களில் வயல்களிலும், தொழிற்சாலைகளிலும் இரண்டாண்டு வேலை செய்திருக்க வேண்டும்.

■ கல்வியில் சரித்திரம், தத்துவம் இவை போதிக்கப்படுவதில்லை. யாருக்கு உயர்தரக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி தீர்மானிக்கிறது.

■ தெருக்கள் சுத்தமாக உள்ளன. அந்த நாடு முழுவதும் ஈக்களே கிடையாது — இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி - கே.ஆர்.




படம்: சீனத் தலைவர் மா - சே - துங்குடன் அமெரிக்க ஜனாதிபதி ஃபோர்ட்.



# ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

# திருத்தணி

செங்கற்பட்டு மாவட்டம் (தமிழ்நாடு)

## ஆடிக்கிருத்திகை

**21-7-76 (புதன்கிழமை)**

**21-7-76 முதல் 23-7-76 முடிய**

**தெப்பம் நடைபெறும்**

பல இலட்சம் பக்தர்கள் வருகை புரிந்து மலர்க் காவடிகள் இலட்சத்திற்கு மேல் சமர்ப்பிக்கும் கண்கொள்ளாக் காட்சியினைக் கண்டுகளிக்கவும் தணிகை முருகன் அருள்பெறவும் வருகை தர வேண்டுகிறோம்.

பக்தர்கள் தங்கும் வசதிக்காக புதிய குடியிருப்பு இல்லங்களும் அறைகளும் கட்டி முடிக்கப்பெற்று வாடகைக்கு விடப்பட்டு வருகின்றன. மலைக்கு வாகனங்கள் செல்ல மலைப்பாதையும் பக்தர்கள் வசதியாக மலைக்குச் சென்று வர "பஸ்" வசதியும் செய்து தரப்பட்டிருக்கின்றன.

பாதி நன்கொடைத் திட்டத்தின் கீழ் ரூ. 10,000 செலுத்துவோருக்கு குடியிருப்பு இல்லம் கட்டித் தரப்படும். மேற்படி இல்லத்தில் ஆண்டொன்றுக்கு 60 நாட்கள் இலவசமாகவும் தங்கலாம்.

தங்கத் தேர் உற்சவக் கட்டணம் ரூ. 303, உபயம் நடத்த விரும்புவோர், நிருவாக அதிகாரிக்கு மேற்படி தொகையை அனுப்பி, பெயரைப் பதிவு செய்துக் கொள்ள வேண்டுகிறோம்.

பள்ளியறை பூசைக் கட்டளையில் சேர விரும்புவோர் ரூ. 251, நிருவாக அதிகாரிக்கு அனுப்பிப் பெயரைப் பதிவு செய்துக் கொள்ள வேண்டுகிறோம்.

எஸ். சோமசுந்தரம், பி.ஏ., பி.எல்.

*உதவி ஆணையர்/நிருவாக அதிகாரி*

# பாடுவோம் பாப் மியூசிக்! 1

கதை: தமயந்தி/சாருகேசி

சித்திரம்: ராஜு

கந்தர்வ கான சபா செக்ரட்டரி மார்க்க சகாயத்தின் வீடு. கூடம் முழுதும் புகைப்படங்கள் மாட்டப்பட்டிருக்கின்றன — பிரபல நடிக நடிகையர்... புகழ் பெற்ற அரசியல்வாதிகள் ஆகியோருடன் மார்க்க சகாயம்....



















ஏதாவதும் ஒரு சபாவில் முதலில் வைக்கட்டும். அப்புறம் கந்தர்வ கான சபாவில் வைக்கிறோம். நமஸ்காரம்!
அப்படிச் சொல்லப்படாது. முகவீணை...


யோவ் முகவீணை! நான் இப்போ உம்ம கச்சேரியை வைக்கிறதாயில்லை. ஏதாவதும் டிராமா எழுதி வைத்திருக்கிறீரா? கொண்டு வாரும்! வீணையில் முகம் பார்க்கலாம் என்று டைட்டில் போடும். படித்துப் பார்த்து விட்டு நன்றாயிருந்தால் போடுகிறேன்.
நான் நாடகம் எப்படி ஸ்வாமி எழுத முடியும்? முகவீணை வாசிக்கிறவன்...


அப்போ முகவீணையே வாசித்துக் கொண்டிரும். போம்.


அடுத்து, கதவருகே நிற்கிறான் ஓர் இளைஞன் கையில் கிடாருடன்.
சார்!
வித்யா, யார் அங்கே மறுபடியும்? அந்த முகவீணை யோய் இடுப்பு பிடிப்பு ஏதாவதும் வந்திருக்கிறதா பார். எனக்கு இப்போதே இடுப்புப் பிடித்துக் கொண்டிருக்கிறது.


யார் நீங்கள்?
நான் அருண். பாப் மியூசிக் ட்ரூப் வைத்திருக்கிறேன். உங்கள் சபாவில் ஒரு சான்ஸ்...


ஹஹ் ஹஹ் ஹா! என் சபாவிலா?... உள்ளே வாருங்கள்... அப்பா, இவர் மிஸ்டர் அருண். பாப் மியூசிக் கச்சேரி நடத்துகிறாராம்.



தொடரும்

**கா**ன்ஸ்டபிள் அய்யாசாமி நடந்து கொண் டிருந்தார். இரவு பதினொரு மணி. இலேசான குளிர்க் காற்று வந்து மோதி அவர் காதோரங்களை நனைத்தது. அந்த இரவின் நிசப்தமான அமைதியில் மெதுவாகத் தம் கையிலிருந்த தடியால் தரையில் தட்டிக் கொண்டே நடந்தார். இரவு நேரத்தில் பார்க்கும்போது போக்குவரத்து இல்லாமல் சாலை மிகவும் விசாலமாகி விட்டது போலத் தெரியும் போலியான தோற்றத்தை ரசிக்கும் மனநிலையில் அவர் இல்லை.

அவர் இன்று இரவுக்குள் எப்படியும் ஐந்து கேஸ்களாவது பிடித்தாகவேண்டும். மாதக் கடைசி. அவருடைய பங்குக்கு அவர் சரியாகக் கேஸ்களைப் பிடிக்கவில்லை. காலையில் கூட சப் – இன்ஸ்பெக் டர் அவரைப் பார்த்துச் சத் தம் போட்டுக் கொண் டிருந்தார்.

''அய்யாசாமி! நீ என்னய்யா வேலை பார்க்கிறே? தேதி என்ன ஆச்சு? இன் னும் சரியாகவே கேஸ் எல்லாம் கொடுக்கல்லியே?''

''அது வந்து.... பார்க் கிறேன் சார்!''

''என்னய்யா, பார்க்கி றீங்க? அதெல்லாம் எனக் குத் தெரியாது. இன்னைக்கு ராத்திரிக்குள்ளே ஒரு ஐஞ்சு கேஸ் பிடிச்சுக்கிட்டுவாங்க. நாளைக்கு நம்மஸ்டேஷன்லே யிருந்து ஒரு பதினைஞ்சு கேஸாவது கோர்ட்டிலே ஆஜர் பண்ணியாக ணும். இல்லேன்னா எல்லாருக்குமே கஷ்டம்தான். புரியுதா?''

''சரி சார்.''

''ராத்திரி தூங்க வேண்டாம். தினம் தினம் தூங்கி என்னத்தைக் கண்டீங்க? ராத்திரி முழுக்க ரோந்து சுத்திப் பாருங்க. டிராஃபிக், நியூசென்ஸ் கேஸ் ஏதாவது வரும். ஏதாவது ஸ்கூட்டர், சைக்கிள் இதெல்லாம் பார்த்தாவது புக் பண்ணிட்டு வாங்க.''

''சரி சார்.''

அய்யாசாமி ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்தார். மனத்துக்குக் கொஞ்சம் தெம் பாக இருந்தது. பிறகு தெருவைக் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தார். தெருவில் நட மாட்டமே இல்லை. அவருக்கு எரிச்சலாக வந்தது.

தூரத்தில் ஏதோ ஒரு வெளிச்சம் புள்ளி போலத் தோன்றிப் பிறகு அவரை நோக்கி மெதுவாகப் பெரிதாகிக் கொண்டே நகர்ந்து வந்தது. பார்த்தார். யாரோ ஓர் ஆள் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். அவன் தம்மருகில் வந்ததும் அவனை உற்றுப் பார்த் தார். அவனும் இவரைக் கண்டதும் வேகத்தை மட்டுப்படுத்தினான். அய்யாசாமி யோசித்தார். 'இவன் சைக்கிளில் வரு கிறான். விளக்கு போட்டுக் கொண்டுதான் வருகிறான். இவனை எப்படிப் பிடிப்பது?'




இப்படி யோசித்த அவருக்கு உடனே சிரிப்பும் வந்தது. 'என்னுடைய வேலை என்ன? எல் லோரும் சட்டப்படி நடக்க வேண்டும். அதைக் கண்காணிக்க வேண்டும். அவன் சட்டப்படி லைட்டுடன் வந்தால் நான் சந் தோஷப்பட வேண்டும். ஆனால் எவனாவது ஒருவன் சட்டத்தை மீறமாட்டானா என்று ஏன் நினைக்கிறேன்?'

சுவரில் சாய்ந்து கொண்டு எதிரே சுவரில் ஒட்டியிருந்த சினிமாப் போஸ்டரைப் பார்க்க ஆரம்பித்தார். திடீரென ஏதோ 'கிச் கிச்' என்ற சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். யாரோ ஓர் ஆள் சைக்கிளில் வந்து கொண் டிருந்தான். சைக்கிளில் விளக்கு இல்லை. 'விருட்' என எழுந்தார் அவர்.

ஒரு பதினெட்டு வயதுப் பையன்தான் சைக்கிளை ஓட்டி வந்து கொண்டிருந்தான்.

ஒன்றும் தோன்றாமல் அவர் மௌனமாக நின்றார். அவன் இவரைப் பயத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான்.

ஒரு பெருமூச்சை விட்டுக் கொண்டே அய்யாசாமி தெருவோரத்துக்குச் சென்று அங்கிருந்த ஒரு கடை வாசலின் படிக்கட்டில் அமர்ந்து கொண்டார். 'அந்த ஆள் ஏன் சைக்கிளில் விளக்குடன் வந்தான். விளக்கு இல்லாமல் வந்திருக்கக் கூடாதா?' ஒருகணம்

உடனே விசிலை எடுத்து 'பிர்' என ஊதினார். விசில் சத்தம் கேட்டு அவன் திடுக்கிட்டுத் திரும்பினான். போலீஸைக் கண்டதும் வெல வெலத்துப் போய்த் தடாலெனச் சைக்கிளை விட்டுக் கீழே இறங்கினான்.

அய்யாசாமி மெதுவாக அவனிடம் நடந்தார். அவன் ஒன்றும் தோன்றாமல் பிரமை பிடித்தவன் போல் நின்றான். ஹாண்டில் பாரைப் பிடித்துக் கொண்டிருந்த அந்தப் பையனின் கை விரல்கள் நடுங்கின. அய்யாசாமி சைக்கிள் ஹாண்டில்பாரைப் பிடித்தார். பிறகு சைக்கிளைப் பிடித்து இழுத்தார்.

''இப்படி ஓரமா வா.''

''சார்....'' என்றான் அவன்.

''இப்படி ஓரமா வாடான்னா. பேச்சு எல்லாம் வேண்டாம்.''

அவன் ஓரமாகச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்தான்.

'' சைக்கிளை நிறுத்திவிட்டு இங்கே வா.''

அவன் சைக்கிள் ஸ்டாண்டைப் போட்டு நிறுத்தினான்.

'' உன் பேர் என்ன?''

''சார்.... இந்த ஒரு தடவை விட்டுடுங்க சார்..... ப்ளீஸ்....''

''உன் பேர் என்ன ?''

''தங்கவேலு!''

'' எந்த ஊர் ?''

''இந்த ஊர்தான்.''

''இந்த ரோடென்ன, உங்க அப்பன் வீட்டுச் சொத்துன்னு நினைச்சியா? நீ நினைச்சபடி சைக்கிள்லே போறதுக்கு. ஏன் விளக்கு எரியல்லே....?''

'' சார்.... நான் அவசரமா வீட்டுக்குப் போகணும் சார்..... அதுதான்.....'' அவன் கெஞ்சினான்.

''அட, அவசரமாப் போகணும்னா விளக்கு இல்லாமப் போகலாமா? அப்படிகூட ஒரு சட்டம் இருக்கா ?'' என்று கிண்டலாகக் கேட்டவர் பிறகு கடுமையாக, ''சைக்கிள்லே விளக்குஇருந்தும் ஏன் போட்டுட்டுவரல்லே?'' என்றார்.

''வர்ற வழியிலே பல்புஃப்யூஸ் ஆயிடுச்சு.''

''அதெல்லாம் கோர்ட்டிலே வந்து சொல்லிக்க. இப்ப ஸ்டேஷனுக்கு நட.''

அவன் மெதுவாகச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடந்தான். கூடவே அய்யாசாமியும் நடந்தார்.

''சார்..... வந்து....''

''பேசாம வாடா.''

இருவரும் ஒன்றும் பேசாமல் நடந்தார்கள். திடீரென அய்யாசாமி நின்றார்.

'' டேய். சைக்கிள் வால்வ் ட்யூபைப் பிடுங்குடா.''

''இல்லே சார். நான் ஓடமாட்டேன். உங்க கூடவே தள்ளிக்கிட்டு வர்றேன் சார்.''

''வால்வ் ட்யூபைப் பிடுங்குடான்னா...''

அவன் குனிந்து வால்வ் ட்யூபைப் பிடுங்கினான். புஸ் என்ற சத்தத்துடன் டயர் தன் உயிரை இழந்து தட்டையாக ஒரு பெல்டைப் போல் உருமாறியது. அந்தப் பையனுக்குக் கண்களில் பாதி நீர் வந்துவிட்டது. தலையைக் குனிந்து கொண்டு சைக்கிளைத் தள்ளினான். சைக்கிளின் ரிம் காற்று இல்லாததால் 'டங் டங்' என அடித்தது.

அய்யாசாமி யோசித்தார். இன்னும் கேஸ்கள் வேண்டுமே. சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே நடந்தார்.

எதிரே ஏதோ கார் வருவதுபோலச் சத்தம். ஆனால் வெளிச்சம் சரியாகத் தெரியவில்லை. பக்கத்தில் வந்தவுடன்தான் தெரிந்தது. ஒரு கார் வேகமாக வந்து கொண்டிருந்தது. இரண்டு ஹெட் லைட்டுகளும் எரியவில்லை.

அய்யாசாமி விசிலைப் பலமாக ஊதினார். இவரைப் பார்த்ததும் கார் 'கிரீச்' என்ற பிரேக் சத்தத்துடன் நின்றது.

அய்யாசாமி சைக்கிள்காரப் பையனைப் பார்த்துக் கூறினார். ''டேய், அந்த மூலேலே



போய் நில்லுடா. போ. ஏதாவது ஓடினே... தெரியும்...'' என்று கூறிவிட்டுக் காரை நோக்கி நடந்தார். பிறகு டிரைவர் பக்கமாகச் சென்று ஜன்னல் வழியாக டிரைவரைப் பார்த்தார்.

'' டிரைவிங் லைசென்ஸ் இருக்கா ?''

'' இருக்கு '' என்று கூறிய டிரைவர் லைசென்ஸைக் காண்பித்தான். அதை வாங்கி அப்படியும் இப்படியும் பார்த்துவிட்டுத் திருப்பிக் கொடுத்த அய்யாசாமி கேட்டார்.

''காரிலே ஏன் லைட் இல்லாம வர்றீங்க?''

'' எரிஞ்சுக்கிட்டுதான் சார் இருந்தது வர்ற வழியிலே ரிப்பேர் ஆயிடுச்சு. ஏதோ ஒயர் கட் ஆயிடுச்சு போல இருக்கு.''

''இதை நம்பச் சொல்றீங்களா?''

''மிஸ்டர்'' என்று கார் பின் சீட்டிலிருந்து ஒரு குரல் கேட்டது.

அய்யாசாமி பின் சீட் பக்கம் தலையைத் திருப்பிப் பார்த்தார். ஒரு முப்பத்தைந்து வயது மனிதர் ஓரத்தில் அமர்ந்திருந்தார். செல்வச் செழிப்பின் வளம் அவர் முகத்தில் தெரிந்தது. அருகே ஒரு பெண் பளிரென்று நகைகளுடன் இவரை ஏளனமாகப் பார்த்தாள். புசுபுசுவென்ற முடியுடன் ஒரு வெள்ளை நாய் இவரைப் பார்த்துக் குரைத்தது.

# ஜீன்ஸ்

நீல நிற ஜீன்ஸ் (Blue Jeans) இன்று ரொம்பப் பிரசித்தம். முதன் முதலில் பிரான்ஸிலிருந்து லெவி ஸ்ட்ராஸ் என்ற இளைஞர் அமெரிக்காவுக்குக் கொண்டு வந்தார். கலிபோர்னியாவில் தங்கம் நிறைய கிடைக்கும் என்று பலர் அங்கே வந்தபோது இவரும் இந்த முரட்டுத் துணி பேல்களோடு வந்தார். தங்கம் தேடியவர்கள் காடு மலைப்பாதைகளில் திரிய வசதியாக இந்த முரட்டுத் துணியை வாங்கி அணிய ஆரம்பித்தனர். அவர்களுக்குத் தங்கம் கிடைத்ததோ இல்லையோ லெவிக்கு நல்ல வியாபாரம் ஆயிற்று. அவர் நிறுவிய கம்பெனி இப்போது ஆண்டுக்கு இரண்டு கோடி டாலருக்கு வியாபாரம் செய்கிறது. சாமானியரிலிருந்து ஜாக்கிலின் கென்னடி, பிரிட்டிஷ் இளவரசி ஆன் வரை இந்த நீல ஜீன்ஸ் அணியாதவர் கிடையாது.

— எகனாமிக் டைம்ஸ் - பாபு



OOOOOOOOOOOOOOOOOOOOOOOO

''மிஸ்டர். யாரும் வேணும்னே விளக்கு இல்லாம வர்றதில்லே. வர்ற வழியிலே ரிப்பேர் ஆயிடுச்சுன்னு டிரைவர் சொன்னா நீங்க நம்பணும். விளக்கு இருந்தா போட்டு வர்றதிலே எங்களுக்கென்ன கஷ்டம்?'' என்றார்.

அய்யாசாமிக்குச் 'சட்'டென பதில் வரவில்லை. அவரின் அதிகார தோரணையிலிருந்த குரல், அவர் காருக்குள் இருந்த சூழ்நிலை எல்லாம் அவர் வாயைச் சிறிது நேரம் அடைத்தது.

பிறகு சமாளித்துக் கொண்டு பேசினார்.

''அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது சார். சட்டப்படி நீங்க காரிலே விளக்கு இல்லாம வரக் கூடாது. ரிப்பேர் ஆயிடுச்சுன்னா ரிப்பேர் பண்ணிகிட்டு வரணும். உங்க மாதிரி பெரிய மனுசங்களே இந்த மாதிரி பண்ணினா எப்படி?'' என்று கூறிவிட்டுப் புத்தகத்தை எடுத்து வண்டி நம்பரைக் குறித்துக் கொண்டார்.

''மிஸ்டர். இப்போ என்ன பண்ணப் போறீங்க?''

''சார்ஜ் பண்ணப் போறேன்.''

அந்தப் பெரிய மனிதர் காரை விட்டுக் கீழே இறங்கி அய்யாசாமியிடம் வந்தார்.

''சார்ஜ் பண்ணினா நாளைக்குக் கோர்ட்டுக்கு வரணுமா?''

''ஆமாம்.''

''இந்த ஏரியா சப் இன்ஸ்பெக்டர் பேர் என்ன?''

''தேவராஜன்.''

''தேவராஜன்தானே. அவர் என் மாமா பையன்தான். தெரியுமா?''

அய்யாசாமிக்குக் கோபம் வந்தது.

''என்ன சார், இப்படிச் சொன்னா விட்டுடுவேன்னு நினைக்கிறீங்களா? எல்லாரும் மாட்டிக்கிட்டா இப்படித்தான் ஏதாவது சொல்லுவாங்க. ஏதோ கொஞ்சம் விட்டா சும்மா பேசிக்கிட்டே போறீங்களே!''

அவர் சார்ஜ் ஷீட்டை எழுத ஆரம்பித்தார்.

அப்போது படபடவென்று மோட்டார் சைக்கிள் வரும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார். சப் இன்ஸ்பெக்டர் தேவராஜன் தான் வந்து கொண்டிருந்தார்.

கார் அருகே வந்ததும் வண்டியை நிறுத்திவிட்டுக் கீழே இறங்காமலே கால்களை மட்டும் தரையில் ஊன்றியபடி கேட்டார்.

''இங்கே என்னய்யா கலாட்டா?''

அய்யாசாமி ஒரு சல்யூட் அடித்தார்.

''காரிலே ஹெட் லைட் இல்லாம வந்திருக்காங்க சார்.''

''அப்படியா?''

மோட்டார் சைக்கிள் இஞ்சினை அணைத்து விட்டு சப் இன்ஸ்பெக்டர் கீழே இறங்கினார். பெரிய மனிதர் அருகில் சென்றதும் அவர் ஆச்சரியத்துடன் கேட்டார்:

''அட, நீங்களா?''

''ஆமாம். வர்ற வழியிலே லைட் ரிப்பேர் ஆயிடுச்சு. இவரு சொன்னா நம்பமாட்டேங்கிறாரு.''

''இதெல்லாம் பார்த்து வர்றதில்லையா?''

''தப்புத்தான். ஏதோ அவசரம். வந்துட்டோம். ஏதோ நீங்க பார்த்து...''

''இந்த மாதிரி எல்லாம் நீங்க வண்டி ஓட்டக் கூடாது. சட்டத்தை மீறுவது நியாயம் இல்லே. இந்த ஒரு தடவை விடறேன். முதல்லே ஏதாவது வொர்க்ஷாப்லே ரிப்பேர் பண்ணிக்கிட்டு அப்புறமாப் போங்க.''

''ரொம்பத் தாங்க்ஸ் சார்.''

''சரி. போங்க.''

அந்தப் பெரிய மனிதர் வெற்றியுடன் காரை ஸ்டார்ட் செய்து கிளம்பினார்.

''அய்யாசாமி! அவர் என் அத்தை மகன்டா.''

''எனக்குத் தெரியாது சார்!''

''ஏதாவது கேஸ் பிடின்னா அதுக்காக இப்படியா....'' என்று கூறிவிட்டு சப் இன்ஸ்பெக்டர் மோட்டார் சைக்கிளை ஸ்டார்ட் செய்து கிளம்பினார்.

அவர் போனவுடன் அய்யாசாமி அந்த சார்ஜ் ஷீட்டைப் பார்த்தார். மனத்தில் ஆத்திரமும் விரக்தியும் பொங்கி வழிந்தன. தம் நிலைமை இவ்வளவு கேவலமாய்ப் போனதை நினைத்தார். அந்தப் பேப்பரைப் படாரெனக் கிழித்து எறிந்தார்.

திடீரென அந்தச் சைக்கிள் பையனின் நினைவு வந்தது. அவனை நோக்கி நடந்தார். இவரைக் கண்டதும் கீழே தலைகுனிந்து உட்கார்ந்து கொண்டிருந்த பையன் மரியாதையுடன் எழுந்து நின்றான். பிறகு அய்யாசாமியைப் பரிதாபமாகப் பார்க்க ஆரம்பித்தான்.

சிறிது நேரம் அவனுடைய ஆதரவற்ற விழிகளைப் பார்த்தார் அய்யாசாமி.

அவன் விழிகளில் அவர் எதையோ படித்தார்.

''டேய், இங்கே வாடா'' என்றார். பையன் வந்தான். ''இனிமே இந்த மாதிரி விளக்கு இல்லாமே வந்தே கோர்ட் மட்டும் இல்லே, உதையும் விழும். போடா.''

''சரி சார்.''

பையன் விடுவிடுவென சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடந்தான். அய்யாசாமி வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தார்!

வாழ்க்கையில் சுயமாக வளம் பெறும் ஆடவர்...

...அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார்!




நிச்சயமாக, மஃபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

-M.461 TM

# சுத்தமான காப்பியிலிருந்து தயாராகும் ஒரே ஒரு இன்ஸ்டன்ட் காப்பி

# இதுதான்.




மன நிறைவு தரும்
மணமும் சுவையும் மிக்க
தரமான தென்னிந்திய
காப்பிக் கொட்டை
யிலிருந்து தயாராகிறது
நெஸ்கஃபே. 100%
சுத்தமான காப்பி.
ஆகவே தான் மற்றெந்த
இன்ஸ்டன்ட் காப்பியையும்
விட அதிகமாக திருப்தி
படுத்துகிறது நெஸ்கஃபே.



உலகெங்கும்
அதிகமாய்
விற்பனையாகும்
இன்ஸ்டன்ட் காப்பி

A NESTLÉ product

## நெஸ்கஃபே®

—100% சுத்தமான காப்பியிலிருந்து தயாராகும்
இன்ஸ்டன்ட் காப்பி இது ஒன்றே.

NNCM-22 TAM

# சேரமான் காதலி

## கண்ணதாசன்

### அத்தியாயம் 16

## விண்ணுலகில் புதிய தாமரை

குலசேகர ஆழ்வார் உடல் நோயுற்றுப் பள்ளி கொண்டார் என்ற செய்தி சோழ நாடெங்கும் பரவுவதற்கு வெகு நாட்களாகவில்லை. செவி வழிச் செய்தியாகவே அது ஒரே நாளில் பரவி விட்டது.

ஆயிரக் கணக்கான அடியார்கள் பல திசைகளிலிருந்தும் திருக்கண்ணபுரத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தார்கள்.

அரங்கத்திலிருந்து அவர் வந்ததும் மருத்துவர் அவரைச் சோதித்ததும் உள்ளே நுழைந்த அங்கதன், ஆழ்வாரின் பாதங்களில் விழுந்து அழுது புலம்பினான்.

அவனிடம் எந்தச் செய்தியையும் கேட்க அவர் விரும்பவில்லை.

தமது படுக்கை இறுதிப் படுக்கை என்பதை உணர்ந்து கொண்டு விட்ட ஆழ்வார் இனி தன் மகனுக்குத் தாம் சொல்ல வேண்டிய செய்தி எதுவும் இல்லை என்று கருதினார்.

''அவன் இறந்து போயிருந்தாலும் வைகுந்தத்தில் அவனைச் சந்திக்கப் போகிறோம். ஆகவே அவனைப் பற்றி நினைப்பதற்கு இனி என்ன இருக்கிறது?'' என்றும் நினைத்தார்.

அங்கதனோ மார்த்தாண்டவர்மன் கொல்லப்பட்டு விட்டதாகச் சொன்னால் ஆழ்வாரின் ஆவி உடனே பிரிந்து விடும் என்று கருதினான்.

அவனால் அழத்தான் முடிந்தது; ஆனால் ஆழ்வாரால் அவனைத் தேற்ற முடியவில்லை.

கடைசிக் காலத்தில் மன்னர் திருமுகத்தைச் சந்தித்து விட்டோம் என்பதிலேயே அவன் அமைதி யடைந்தான்.

நன்றி மிக்க அந்த ஊழியன் கைகளைக் கட்டிக் கொண்டு காலடியிலேயே நின்றான்.

ஆழ்வாரின் திருமுக தரிசனத்துக்காக வந்த பல்லாயிரம் மக்களையும் சோழ



நாட்டுப் படைவீரர்கள் ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தார்கள்.

சிறு சிறு கூட்டமாக உள்ளே சென்று பார்ப்பதற்கு அனுமதித்தார்கள்.

''பார்த்தவர்கள் விலகுங்கள்; பார்த்தவர்கள் விலகுங்கள்'' என்ற சத்தம் அங்குமிங்குமாகக் கேட்டுக்கொண்டிருந்தது.

கண்ணபுரத்துக் கோயில் மணி இடைவிடாமல் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

''யாருக்கும் சொல்லக் கூடியதும் இல்லை; யாரிடமும் கேட்கக் கூடியதும் இல்லை'' என்ற நிலையில் ஆழ்வார் பள்ளி கொண்டிருந்தார்.

திடீரென்று உட்புறத்திலிருந்து அவரது பட்டத்து ராணி வந்து அவர் அருகிலே அமர்ந்தாள்.

மறைந்துபோன பாண்டிய குமாரி, மாமன்னர் சேரமான் பெருமானின் மனைவிதான் அவள்.

இம்மையில் அவரைப் பிரிந்த அவள் மறுமைக்கு அழைத்துப் போக, தானே வந்திருந்தாள்.

ஆம்; அவரது கண்களில் மட்டும் அவள் காட்சியளித்தாள்.

அவர் பள்ளி கொண்டிருந்த கற் கட்டிலிலேயே அவரது பக்கத்தில் அவள் அமர்ந்தாள்.

ஆழ்வாரைச் சுற்றிலும் ஏதோ ஒரு ஜோதி மின்னுவது மட்டுமே சுற்றியிருந்தவர்களின் கண்களுக்குத் தெரிந்ததே தவிர, அவரது பிராட்டியார் வந்திருப்பதை அவர்கள் அறியவில்லை.

பக்திமான்களின் இறுதிக் காலத்தில் பகவானே வந்து அழைத்துக் கொண்டு போவது அவர்கள் கண்களுக்கு மட்டுமே தெரியும்.

அருகில் அமர்ந்த பிராட்டியாரைப் பார்த்து, ''தேவி! நீ சுகமாக இருக்கிறாயா?'' என்று கேட்டார் ஆழ்வார்.

யாரைப் பார்த்துக் கேட்கிறார் என்பது அங்கிருந்தவர்களுக்குப் புரியவில்லை.

''பெருமானே! உங்கள் வருகைக்காகவே நான் காத்துக் கொண்டிருந்தேன். விண்ணுலகில் இப்போது ஒரு புதிய தாமரை பூத்திருக்கிறது. திருமகள் அந்த ஆசனத்தை உங்களுக்காகச் சிருஷ்டித்திருக்கிறாள். நாம் இருவரும் அமர்வதற்கு அதில் இடமிருக்கிறது. நாம் ஒன்றுசேர வேண்டிய நேரம் நெருங்கி விட்டது'' என்றாள் அவள்.

ஆழ்வாரின் கண்களில் வைகுந்தக் காட்சிகள் தென்படலாயின.

அரங்கனின் திவ்ய தேசம் ஒளிமயமாக அவர் கண்ணுக்குத் தெரிந்தது.

உயர்ந்த சக்கர வாசல; அதன் நடுவே கோபி இடப்பட்ட அழகிய கதவுகள்; பொன் மயமான விதானங்கள்; குளிர்ச்சியான நீல நிறத்தில் அமைக்கப்பெற்ற மதில் சுவர்கள்; பஞ்ச நாகங்கள் அணிவகுத்த ஒரு பள்ளி; நன்கு வாழ்ந்து சுமங்கலிகளாக இறந்த — திருமகள் போல் தோற்றமுடைய அழகிய மாதர்கள், உடலையும் சுமந்து வைகுந்தம் சென்ற உத்தம பக்தர்கள்.



ஆழ்வாரின் கண்கள் அந்தக் காட்சிகளைச் சுவைக்கத் தொடங்கின. அங்கிருந்து அவர் மீண்டு திரும்பிப் பார்த்த போது பூவுலகம் அவர் கண்ணுக்குத் தெரிந்தது.

கண் கலங்கி நிற்கும் அடியவர்கள், காலடியில் அங்கதன்.

விடை கொடுப்போர் ஒருபுறம், வரவேற்க வந்திருக்கும் பட்டத்து ராணி மறுபுறம்.

''தேவி! உனது மைந்தனை நீ பிரிந்ததைப் போல் நானும் பிரியப் போகிறேன். உனது தனி வருகையில் இருந்து நமது மைந்தன் இன்னும் மண்ணுலகில் இருப்பது எனக்குப் புரிகிறது. மண்ணுலகில் இவை எனது கடைசிக் காலங்கள். மன்னவர் சேரமான் பெருமாள் மறைந்து பல நாட்களாகின

றன. அடியவர் குலசேகர ஆழ்வார் இப்போது மடியப் போகிறுர்.

எனது சுதர்மம் முழுதும் இன்னும் பூர்த்தியடையவில்லை. ஆகவே இன்னும் ஒரு பிறவி எனக்குக் காத்திருக்கிறது.

. குல தர்மத்தில் உனது பங்கு முடிந்து விட்டதாலேயே நீ வைகுந்தத்தில் தங்கி விட்டாய்.

எனக்கு மீண்டும் ஒரு பிறப்பு இருந்து உனக்கு இல்லாமல் போகுமானுல் நான் இளமைத் துறவியாகவே வாழ்வைத் தொடங்க, திருமால் இருவருள் புரிய வேண்டும்.

நாராயணனை உச்சரித்த இந்த நாவி ஞல் நரர்களை உச்சரிக்கும் இந்த ராஜப் பிறவி வேண்டாம்.

என் சுதர்மம் பூர்த்தியாகி விட்ட தாக ஏற்றுக் கொண்டு வைகுந்தத்தி லேயே நிரந்தரமாகத் தங்கிவிட அரங்கன் அருள் புரிந்தால் அதைவிட வேறு பாக்கியம் எனக்கு இல்லை!''

—என்றுர் ஆழ்வார்.

கூடியிருந்தவர்கள் அவர் பேச்சைக் கேட்டு, அவர் தம்வயமிழந்த நிலைக்கு வந்துவிட்டதாகவே கருதினுர்கள். அரு கில் இருக்கும் சேரமா தேவியை அவர்கள் அறியவில்லை.

கடைசிக் கால மரணப் படுக்கையில் மனிதர்கள் பேசும் பேச்சு, தம்மை மறந்து பேசும் பேச்சல்ல; தம்மை அழைக்க வந்திருப்பவர்களிடம் பேசும் பேச்சே.

சொந்த பந்தம் ஏதுமற்ற அடியவர் களை, மூலவனே நேரில் வந்து அழைக் கிறுன்; அல்லாதவர்களை முதலில் பிரிந்து சென்ற உறவினர்கள் வந்து அழைக்கிறுர்கள்.

சேரமாதேவி தன் நாயகனை அழைக்க வந்திருக்கிறுள் என்பது யாருக்குத் தெரியும்?

வெளியே கூட்ட நெரிசல் வரை முறை இல்லாமல் அதிகரித்துக்கொண் டிருந்தது.

அந்த நேரத்தில் ஸ்ரீவல்லபரும், மார்த்தாண்ட வர்மனும், மெல்லிளங் கோதையும் திருக்கண்ணபுரம் வந்து சேர்ந்தார்கள்.

பரந்து விரிந்து நின்ற கூட்டத்தில் எங்கோ ஒரு மூலையில்தான் அவர்கள் நின்றுர்கள்.

கூட்டம் பெருகியிருப்பதேன்? தந்தை இறந்து விட்டாரா?

மார்த்தாண்ட வர்மனும் மெல்லிளங் கோதையும் விம்மி அழத் தொடங்கி ஞர்கள்.

ஓர் அடியவரிடம் ஸ்ரீவல்லபர் கேட் டார்:

''ஆழ்வாருக்கு என்ன நிகழ்ந்தது?''

அடியவர் சொன்னுர்:

''மரணப் படுக்கையில் இருக்கிறுர்; ஆட்களை அடையாளம் கண்டுகொள் ளும் நிலை மாறிவிட்டது.''

'இவ்வளவு தூரம் வந்தும் தந்தை, தன்னைக் கண்டுகொள்ள முடியாதா?'

மார்த்தாண்டவர்மன் மேலும் அழுதான்.

ஸ்ரீவல்லபர் கூட்டத்தினரைப் பார்த் துச் சொன்னுர்:

''ஐயா! கொஞ்சம் வழி விடுங்கள். ஆழ்வார் திருமகனும், அவரது மரு மகளும் வந்திருக்கிறுர்கள்.''

கூட்டத்தில் சிலர் திரும்பிப் பார்த் தார்கள்.

தாங்கள் வழி விட்டதோடன்றி, மற் றவர்களையும் விலக்கி வழியுண்டாக்கத் தொடங்கினுர்கள்.

கூட்டத்துக்குள்ளே நடந்து செல் லும்போது மார்த்தாண்டவர்மனின் இதயம் துடித்தது.

'நினைவிழந்த நிலையில் தந்தையைக் காணப் போகிறேம்' என்று எண்ணிய போது அவன் நெஞ்சம் வெடித்து விடும்போலிருந்தது.

சுற்றியிருந்த கூட்டத்தையோ அது துடித்த துடிப்பையோ அவனுல் காண இயலவில்லை.

விடுதி வாசலுக்கு வந்தபோது அவன் கால்கள் தள்ளாடின.

மெல்லிளங்கோதையும் அதே நிலை யில் இருந்தாள்.

ஸ்ரீவல்லபர் திருவேங்கடத்தானை ஜபித்துக் கொண்டிருந்தார்.

''இளவரசர் மார்த்தாண்ட வர்மர் வருகிறுர்; வழிவிடுங்கள்'' என்று மண்ட பத்து வாசலை அடைத்துக்கொண்டிருந்த அடியவர்களையும் விலக்கினுர்கள் சிலர்.

உள்ளே நுழைந்த மார்த்தாண்ட வர் மன், கூரையை நோக்கிக் கண்களை விழித்தபடி மல்லாந்திருந்த தன் தந்தையைப் பார்த்தான்.

தன்னைத் தூக்கி வளர்த்த தோள்கள், தான் தவழ்ந்து விளையாடிய மார்பு. அவன் குழந்தையைப் போல் ''அப்பா!'' என்று கதறி மார்பின் மீது சாய்ந்தான்.

மார்த்தாண்ட வர்மனைப் பார்த்த அங்கதன் அதிர்ச்சி யடைந்தான். தானே மரணத்தை வென்றது போல் மகிழ்ச்சி யடைந்தான்.

மகனின் கண்ணீர் மலர்ச் சரம் போல் உதிர்ந்தது.

அசைவற்றிருந்த குலசேகர ஆழ்வார் சற்று அசைந்தார்.

தம் இரண்டு கரங்களாலும் தம் மார்பின் மீதிருந்த மார்த்தாண்ட

---

**புரிகிறதா?**

தன் மனைவியைவிடத் தான் புத்திசாலி என்று ஒருவன் நினைத் துக் கொண்டானுனுல் அவன் உண்மையிலேயே புத்திசாலிப் பெண் ணைத்தான் மணந்திருக்கிறுன் என்று அர்த்தம்! - ஸ்பேட்ஸ்—சாமி









# ரம்யா

## இவர்கள் இருவரையுமே திருப்தி செய்கிறது




பொங்கி வரும் நுரை—
பொலிவு தரும் சலவை



வர்மன் முகத்தை மெதுவாகத் தூக்கிப் பார்த்தார்.

''மகனே!'' என்றார்.

தந்தைக்கு நினைவிருக்கிறது. தாளாத உணர்வோடு, ''அப்பா! அப்பா!'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

'எப்போது வந்தாய், எப்படி வந்தாய்?' என்று எதையும் அவர் கேட்கவில்லை.

''உன் தாயைப் பார்த்தாயா? சிறு வயதில் பார்த்தது; நினைவிருக்காது. இதோ பார்'' என்று இடதுபுறம் கையைக் காட்டினார்.

மனைவியின் தலையைத் தடவிக் கொடுப்பது போல், இடது கையால் தடவிக் கொடுத்தார்.

மார்த்தாண்டவர்மனுக்கும், மற்றவர்களுக்கும் அவர் வெறும் கையை மேலும் கீழும் அசைப்பதாகவே தோன்றிற்று.

நினைவிழந்த நிலைதானா? நினைவு வந்து வந்து திரும்புகிறதா?

முந்தானையில் வாய் புதைத்தபடி, ''மாமா'' என்றாள்,மெல்லிளங்கோதை.

ஆழ்வார் இடதுபுறம் திரும்பி, ''உன் மருமகளைப் பார்த்தாயா?'' என்று கேட்டார்.

அவர் கண்ணுக்கு மட்டும் தெரிந்த அவரது மனைவி, ''அழகாக இருக்கிறாள்'' என்று சொன்னது, அவர் காதுக்கு மட்டும் கேட்டது.

உடனே ஆழ்வார் வலதுபுறம் திரும்பி, ''கோதை, நீ அழகாக இருப்பதாக என் மனைவி சொல்கிறாள்!'' என்றார்.

கோதையால் அழத்தான் முடிந்தது-

ஆனால் ஸ்ரீவல்லபருக்கு மட்டும் ஏதோ புரிந்தது.

'மரணத்தின் வாசற்படியில் மனைவியைச் சந்தித்துக் கொண்டிருக்கிறார் ஆழ்வார்' என்பதை அவரது ஞான உள்ளம் உணர்ந்தது.

ஸ்ரீவல்லபரைக் காட்டி, ''அகஸ்தீசுவரம் காட்டில் உன்னைக் காப்பாற்றியவர் இவர்தானே?'' என்று கேட்டார் ஆழ்வார்.

''ஆமாம், அப்பா!'' என்றான் மார்த்தாண்டன்.

''எனக்குத் தெரியுமே...'' என்றார் ஆழ்வார்.

உடனே இடதுபுறம் திரும்பி மனைவியைப் பார்த்து, ''சுவாமியை வணங்கிக்கொள்'' என்றார்.

அவள் எழுந்து வந்து ஸ்ரீவல்லபரின் கால்களைத் தொட்டு வணங்கினாள்.

மார்த்தாண்டவர்மனைக் கட்டிப் பிடித்து உச்சி மோந்து நெற்றியில் முத்தமிட்டாள்.

அதை ஆழ்வார் ரசித்தாரே தவிர, மார்த்தாண்ட வர்மனுக்கு எந்தவித ஸ்பரிச உணர்ச்சியும் இல்லை.

அது போலவே மெல்லிளங்கோதையின் நெற்றியிலும், கன்னங்களிலும் மாறி மாறி முத்தமிட்டாள் பட்டத்து ராணி.

''அப்பா! எவ்வளவோ உங்களோடு பேச வேண்டும் என்று ஆவலோடு ஓடி வந்தேன். இப்படி நினைவிழந்த நிலையில் உங்களைச் சந்திக்க நேர்ந்ததே... நான்கு நாட்களுக்கு முன்னதாகவே இறைவன் என்னை இங்கு அனுப்பியிருக்கக் கூடாதா? முடிவைப் பார்க்க அனுமதித்த இறைவன், என் எதிர்காலம் பற்றி உங்கள் முடிவைக் கேட்க அனுமதிக்கவில்லையே?'' என்று மார்பில் விழுந்து மேலும் புலம்பினான் மார்த்தாண்ட வர்மன்.

''மகனே! நான் நினைவிழந்த நிலையில் இருப்பதாகவா நீ கருதுகிறாய்? நான் விண்ணுலகம், மண்ணுலகம், இரண்டையும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இவ்வளவு காலம் அரங்கனிடம் நான் செலுத்திய பக்திக்கு அவன் எனக்குக் கடைசியாகக் கொடுத்த பரிசு இரண்டையும் ஒன்றாகக் காண்பதே. விண்ணுலகை நான் நெருங்கிக்கொண்டிருக்கிறேன். மண்ணுலகில் உன் எதிர்காலத்தை இனி நான் நிர்ணயிக்க முடியாது. ஆனால், இந்தக் குலசேகரன் செய்த தர்மங்கள் உண்மையானவை என்றால், சேர நாட்டின் மகுடம் உன்னைத் தேடி வரும். எதிரிகளை அழிப்பதற்குரிய ஆற்றல் உனக்கு இல்லாமற் போயினும், அந்த ஆற்றலை அரங்கன் இழந்து விடவில்லை'' என்று சொன்ன ஆழ்வார் இடதுபுறம் திரும்பி, ''இல்லையா ராணி!'' என்று கேட்டார்.

''பிரபு! தங்களைத் தாங்களே அழித்துக்கொள்ளக் கூடிய எதிரிகள்தான், நமது செல்வனை எதிர்த்துக் கொண்டிருக்கிறார்கள். அன்னை பகவதி அவர்களைக் கண்காணித்துக் கொண்டுதான் இருக்கிறாள்'' என்றாள் அவள்.

'தந்தை சரியாகவும் பேசுகிறார்; தன் தாயிடம் பேசுவது போலவும் பேசுகிறாரே' என்று குழப்பம் அடைந்தான் மார்த்தாண்ட வர்மன்.

''நேரமாகி விட்டது பிரபு. நாம் புறப்படலாமா?'' ராணி கேட்டாள்.

வெளியிலே, ''வழி விடுங்கள்; வழி விடுங்கள்'' என்று ஒரு பெண்ணின் ஆங்காரக் குரல் கேட்டது.

அது கல்யாணியின் குரல் அல்லவா! மெல்லிளங்கோதை திகைத்தாள்.

(தொடரும்)

---



நண்பர்: போன மாதம் நடத்திய மாஜிக் ஷோவில் உங்கள் அழகான மனைவியை இரண்டு துண்டாக வெட்டி எல்லாருக்கும் காண்பித்தீர். இப்ப அவள் எங்கே இருக்கிறாள்?

மந்திரவாதி: பம்பாயிலும் சென்னையிலுமாக வாழ்கிறாள்! உ.மன்ஸ் சரா - சரஸ்வதி

ஆளுநர் திரு மோகன்லால் சுகாடியா சுமூகமாகப் பேசுகிறார்; பழகுகிறார். இக்கட்டான கேள்விகளுக்கும் நயமான பதிலைப் புன்னகையுடன் கொடுக்கிறார். இதே நேரத்தில் சுறுசுறுப்புடன் தம் பணிகளையும் செய்கிறார்.



“தமிழகப் பத்திரிகைகளின் சார்பில் உங்களைத் தமிழ் நாட்டுக்கு வரவேற்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். தாங்கள் முதன் முதலில் சென்னை நகருக்கு எப்போது வந்தீர்கள் என்று நினைவுபடுத்திச் சொல்ல முடியுமா?”

“ஆவடி காங்கிரஸ் மகாநாட்டுக்கு வந்த போதுதான் முதல் தடவையாகச் சென்னை

# சுமூகம் + சுறுசுறுப்பு = சுகாடியா

நகரைப் பார்த்தேன். அப்புறம் பல தடவைகள் வந்திருக்கிறேன்.”

“ஆவடி மகாநாட்டின்போது பார்த்த சென்னை நகருக்கும் இப்போது நீங்கள் ஆளுநராகப் பார்க்கும் சென்னை நகருக்கும் ஏதாவது வித்தியாசம் தெரிகிறதா?”

“சூழ்நிலைகள் மாறியிருக்கின்றன. மற்றபடி விவரமாகப் பதில் சொல்ல அவகாசம் தேவைப்படும். நான் புதிய பொறுப்புகளுடன் வந்திருக்கிறேன் அல்லவா?”

“சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டு நீங்கள் முதல் தடவையாக எப்போது சிறைக்குச் சென்றீர்கள்?”

“நான் ராஜஸ்தானத்தில் உள்ள மேவார் சமஸ்தானப் பகுதியைச் சேர்ந்தவன். பிரிட்டிஷ்காரர்கள் அரசாட்சி நடத்திய காலத்தில் எங்களுக்கெல்லாம் இரண்டு எஜமானர்கள். அதாவது சமஸ்தானாதிபதி ஒன்று; பிரிட்டிஷ் நிர்வாகம் இரண்டு. நாங்கள் இந்த இரு சாராருக்கும் தலைவணங்க வேண்டும். சமஸ்தானங்களுக்கு வெளியே இருந்தவர்களுக்கு இதில் பாதித் தொல்லைதான்! சமஸ்தான ராஜாக்கள், பிரிட்டிஷ் நிர்வாகம் என் என்பதற்குள் எண்ணெயாக நிற்பார்கள்.

“வெள்ளையனே வெளியேறு! கிளர்ச்சியை ஒட்டி நானும் என் போன்றவர்களும் ஒரு பெரிய ஊர்வலத்துக்கு ஏற்பாடு செய்திருந்தோம். இதை அறிந்த அரசாங்க நிர்வாகிகள் 21—8—1942ல் எங்களை முன்கூட்டியே கைது செய்து விட்டார்கள். அதையொட்டி எனக்குக் கிடைத்தது பதினெட்டு மாத சிறைவாசம்.”

“நீங்கள் ராஜஸ்தான் மாநிலத்தின் முதன் மந்திரியாக எப்போது பதவி ஏற்றீர்கள்?”

“13-11-1954ல் அந்தப் பொறுப்பு என்மேல் சுமத்தப்பட்டது. மாநில முதல்வர்களிலேயே அப்போது நான் தான் வயதில் சிறியவன். எனக்கு முதலில் கொஞ்சம் அச்சமாகத்தான் இருந்தது. ஆனால் எனக்கிருந்த தன்னம்பிக்கையும், என் சகாக்கள் மீது எனக்கிருந்த நம்பிக்கையும் சேர்ந்து அந்த அச்சத்தைப் போக்கி விட்டன.”

“உங்களுடைய நீண்டகால முதல் அமைச்சர் அனுபவத்துக்காகவே இப்போது உங்களை ஜனாதிபதி ஆட்சி அமுலிலிருக்கும் வேளையில் தமிழக ஆளுநராக அனுப்பி யிருக்கிறார்கள் என்ற என் ஊகம் சரியாக இருக்குமா?”

“ஜனாதிபதியோ, பிரதமரோ இப்படி இருக்கலாம் என்று என்னிடம் சொல்லவில்லை.



ஆனால் உங்கள் கேள்வி அப்படியும் இருக்கலாமோ என்றுஎன்னைச் சிந்திக்கவைக்கிறது.''

''தாங்கள் கர்நாடகப்பிரதேசத்தில்நான்கு வருடங்களும், ஆந்திர மாநிலத்தில் சுமார் ஒன்றரை வருடமும் ஆளுநராகவும் இருந்து அனுபவம் பெற்றவர்தான்! தமிழகத்து ஆளுனராகப் பதவி ஏற்ற தினத்தன்று உங்கள் மன உணர்ச்சி எப்படி இருந்தது?''

''மகிழ்ச்சியாகவும் இருந்தது. மனம் கனமாகவும் இருந்தது. சாதாரண காலத்து ஆளுனர் பொறுப்புக்கும், ஜனாதிபதி ஆட்சி கால ஆளுநர் பொறுப்புக்கும் இடையே நிறைய வித்தியாசங்கள் இருக்கின்றனவே?''

''தங்கள் பொழுது போக்கு?''

''தோட்ட வேலை, மற்றும் குழந்தைகளுடன் நேரத்தைக் கழிப்பது!''

''வணக்கம்; விடை பெறுகிறேன்.''

''பிறகு சாவகாசமாக நாம் சந்திக்கும் போது பல சுவாரசியமான சம்பவங்களைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். அவசியம் வாருங்கள்.''

**பேட்டி: கோமதி சுவாமிநாதன்**



*வட்டமேஜை*

# கண் கலங்கியது; உள்ளம் உருகியது!

''(கல்கியவர்களின் முடிவைப்) பற்றிச் சோகம் பொங்க எழுதி வாசகர்களைத் துயரத்தில் ஆழ்த்த வேண்டியதில்லை'' என்று சொல்லிவிட்டே ஸ்ரீ சுந்தா படிப்போர் உள்ளங்களை இவ்வாரம் (27–6–76) உருக்கியிருக்கிறார்.

அன்னையைப் பார்க்க வேண்டும், பாலாற்று நீர் பருக வேண்டும் என்ற இரு ஆசைகளும் நிராசையாகவே கல்கியவர்களின் வாழ்வு தீர்ந்ததை நினைத்தால் நெஞ்சை வேதனை கவ்வத்தான் செய்தது. அப்புறம் ஒரு விசித்திரமான சமாதானம் தோன்றிற்று.

அந்திம ஆசை நிறைவேறாதவர்கள் மீண்டும் பிறந்தேயாக வேண்டும் என்பது சாஸ்திரம். நம்மைப் பொறுத்தமட்டில் கல்கி போன்றவர்கள் மீளவும் பிறப்பதைத்தானே விரும்புவோம்? பால் கொடுத்து உடலை வளர்த்த தாயை நினைத்து ஏங்கினார்; உள்ளம் வளர்த்த தமிழன்னையின் பாலாகக் கசியும் ஆற்று நீருக்கு அவாவினார். அந்த ஆசைகள் பூர்த்தியாகாததால் அவர் மீண்டும் உடல் கொண்டு அதுவும் இந்தத் தமிழ் மண்ணிலேயே வந்திருக்கிறார் எனக்கொள்ளலாமோ?

சென்னை—53
24–6–76 ரா. கணபதி

எங்கள் குடும்பமே அமரர் கல்கியை இப்போதுதான் பறி கொடுத்ததைப் போல் கண்ணீர் விட்டதை என்னால் மறைக்க முடியவில்லை. அமர காவியம்!

பாதூர்
24-6-76 இ. எஸ். ரங்கநாதன்

கல்கி பல பேர்களுக்கு மணி மண்டபம் கட்டினார். பல நினைவுச் சின்னங்களைத் தம் வாழ்நாளில் திறந்து வைத்தார். ஆனால் திரு சுந்தாவோ தம் உயிர்த்தோழர் 'கல்கி'க்குச் சொல்லாலேயே ஒரு மணி மண்டபம் — ஏன் — ஒரு கோயிலே எழுப்பி விட்டார்! அனைத்து இந்திய மொழிகளிலும் இதை மொழி பெயர்க்கலாம்.

சென்னை—30
25–6–76 கோதா பார்த்தசாரதி

கல்கியின் வரலாறு மட்டுமின்றித் தமிழகத்தின் இலக்கிய, அரசியல், கலை, சமுதாயப் பண்பாட்டுச் சரித்திரத்தையே திரைப்படம் போலக் கண்டு களித்தேன். ''கல்கி''யின் கடைசி நாட்கள் மனத்தைக் கலக்கியது.

சுந்தாவின் சரள நடையும், கல்கியின் எழுத்துக்களிலிருந்தே மேற்கோள் காட்டி விளக்கிய திறமையும் பாராட்டுக்குரியது.

கொமாரபாளையம்
24–6–76 சொ. மு. முத்து

தர்ஜி:

SUNDA'S Ponniyin Pudalvar Unforgettable Biography Excellently Rendered.

Bombay
30-6–76 M. N. Ramamurthi

''ஸௌந்தர்ய லஹரி'' என்ற நூலைப் பற்றிய விமர்சனத்தில், அந்த நூலை வெளியிடப் பெரு முயற்சி எடுத்துக் கொண்ட திருச்சி உறையூர் ஸ்ரீ ஏ. குப்புஸ்வாமி அய்யர் அவர்களைப் பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை. ஜகத்குரு ஆசார்யாளும், ஸ்ரீ புதுப் பெரியவாளும் அவர்களுக்குப் பூர்ணமான அனுக்கிரகம் செய்துள்ளார்கள். மேலும் அன்னாருக்கு ஜகத்குரு ஆசார்யாள் ''குரு கைங்கர்ய மணி'' என்ற பிருதும், ஜரிகை சால்வையுடன் பிரசாதமும் அனுக்கிரஹித்தார்கள்.

சென்னை—86
24–6–76 வி. நாகராஜன்

சமையலறையில் கும்மாளம் கேட்டது. நண்பர்களின் சமையல். வாசனை அவ்வளவாக ரசிக்கும்படியாக இல்லை. சிரித்தவாறு பூட்டைக் கழற்றிப் போடும்போது எதிர் வீட்டு வாண்டு கோபால் வந்து கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனான்.

ஊருக்குப் போயிருந்த அம்மாவின் கடிதம். அலட்சியமாகப் பிரித்தேன். (என்ன சார் எழுதியிருக்கப் போகிறாள்? சனிக்கிழமை எண்ணெய் தேய்த்துக் கொண்டாயா? வேளைக்கு ஒழுங்காகச் சாப்பிடுகிறாயா ? என்றுதான் திருப்பித் திருப்பி எழுதியிருக்கப் போகிறாள்.)

பிரித்துப் படித்தேன். இந்தக் கடிதம் கொஞ்சம் வித்தியாசமாக இருந்தது. 'உன் அத்தை கண் பரிசோதனைக்காக அவள் மகளுடன் வருகிறாள். அவளுக்கும் எனக்கும் அவ்வளவாக ஆகாது. அவள் புறப்பட்டுப் போன பிறகு எழுது. வருகிறேன்' என்றதோடு வழக்கமான வாசகம் ஒன்றும் இருந்தது: ''ஹோட்டலில் தின்று வயிற்றைக் கெடுத்துக் கொள்ளாதே.''

அத்தை வருகிறாள். கூடவே அவள் மகளும் வருகிறாள். நினைவுக்கு வருகிறது சாந்தி. பன்னிரண்டு வயதிலேயே நல்ல பளபளப்பாக இருப்பாளே. ஐந்து வருஷங்கள் கழித்து இப்போது...

கனவில் ஆழ்ந்து போனேன்.

ஹாலில் சலசலப்புக் கேட்டதும் விழித்தேன். அம்மா ஊரில் இல்லாதபோது என் நண்பர்கள் கிரி, சந்திரா, பன்னீர், ராதா எல்லோரையும் என் வீட்டிலேயே வைத்துக் கொள்வேன். 'மெஸ்' சாப்பாட்டினால் நாக்கு செத்துப்போன ஜென்மங்கள். பாவம். வீட்டுச் சமையலையும் ரசிக்கட்டுமே என்று. நாங்களே சமையல் செய்து அதை நாங்களே தைரியமாகச் சாப்பிடுவோம். ஆனால் இப்போது...

''அடே பயல்களா!'' என்றவாறு உள்ளே வந்தேன். (உரிமையுண்டு. எல்லோரையும் விடப் பெரியவன் கிரி. நான் அவனை விட ஆறு மாதம் பெரியவன்.)

''மூட்டையைக் கட்டுங்கள்.''

''ஏ தோ.''

''விருந்தாளி வருகிறது. அம்மா எழுதியிருக்கிறாள்.''

''அப்புறம் என்ன எழுதியிருக்காங்க?'' என்றான் பன்னீர். நாளை ஞாயிற்றுக் கிழமை ஸ்பெஷல் சாப்பாடு பறி போகிறதே என்ற ஆதங்கம் அவனுக்கு.

அப்போதுதான் கடிதத்தை முழுக்கப் படிக்காமல் விட்டது ஞாபகம் வந்தது. பிரித்துப் படித்தவனுக்குப் 'பகீர்' என்றது. ''அவர்களிடம் கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இரு. சின்னச் சின்னப் பொருள்களைத் திருடும் பழக்கம் அவளிடம் உண்டு.''

கிளெப்டோமானியா வியாதியா? அவளுக்கா? நெஞ்சை வலித்தது.

''இந்தப் பனியன் யாருதுடா?'' என்ற கிரியின் குரலைக் கேட்டுத் திரும்பினேன். மூட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள்.

''இருங்கடா!'' பாய்ந்து தடுத்தேன். ''நீங்களும் இருங்க. வீட்டுக்குக் காவல் வேணும்'' விழித்தவர்களுக்கு விளக்கினேன்.

''பாவம்டா நீ. உன் வருங்கால மனைவிக்கு இப்படி ஓர் ஊனமா?'' ஆளுக்கு ஆள் அனுதாபம் காட்டவே அதட்டல் போட்டு அடக்கினேன். அடுத்து...

பரபரப்பாக இயங்கினோம். கண்ணில் பட்ட சின்னச் சின்னப் பொருள்களையெல்லாம் பீரோவில் போட்டுப் பூட்டிவிட்டுக் கையைத் தட்டிக் கொண்டோம், தூக போக.

''ஹலோ!'' ரயிலிலிருந்து இறங்கியதும் உற்சாகமாகக் கேட்டாள் சாந்தி. ''சௌக்கியமாடா?''

பார்த்தேன். திருதிருவென்று வளர்ந்திருந்தாள். கவர்ச்சிகரமான வளர்ச்சி. பருவத்தின் பூரிப்பு. அந்தச் செதுக்கினாற் போன்ற நாசி. அழகாய் இருக்கிறாளே!

பெருமூச்சு விட்டேன்.

வளவளவென்று பேசிக் கொண்டிருந்தாள். ''டாக்ஸி ரேட் ஏறி விட்டதாமே. மீட்டர் சரியாக இருக்கிற டாக்ஸியாகப் பிடி. இல்லாவிட்டால் ஏமாற்றுவான். இரண்டு சூட்கேஸ் தூக்கி வர இரண்டு ரூபாயா? கூலி வேண்டாம். ஆளை விடு. நான் ஒன்று எடுத்



துக்கொள்கிறேன். நீ ஒன்று கொண்டு வா.''
புத்திசாலியாக வேறு இருக்கிறாளே.

பெருமூச்சு விட்டேன்.

வீட்டுக்குள் நுழைந்ததும் சுற்றி ஒரு பார்வை பார்த்தாள். எனக்குத் துணுக் என்றது. என்ன பார்க்கிறாள்? எதைத் திருட லாம் என்று?

''ஒரு பிரம்மச்சாரியின் வீடு என்பது சரியாகத்தான் இருக்கு. இப்படியோர் அலங் கோலமா?'' என்றவள் வரிந்து கட்டிக் கொண்டு இறங்கினாள். பரபரவென்று இயங் கினாள்.

அடுத்த அரை மணியில் வீடு பளபளத்தது. சுறுசுறுப்பாக வேறு இருக்கிறாளே.

எனக்கு ஏக்கமாக இருந்தது.

''பாய்லரில் தண்ணீர் கொதிக்கிறது. கிரி! நீ போய்க் குளி. அதற்குள் பன்னீர் நீ போய்க் கொஞ்சம் இஞ்சியும் கறிவேப்பிலையும் வாங்கி வா. உப்புமாவுக்கு வேணும்.''

'பரவா யில்லையே!' என்று நினைத்துக் கொண்டேன். ஓடி ஓடிக் கூச்சத்துடன் ஒளிந்த பயல்களை இதற்குள் வேலை வாங்கி அதிகாரம் செய்யுமளவுக்குப் பழகி விட்டாளே!

பலகாரம் ஆயிற்று. உப்புமா ருசி யாக இருந்தது. சமையலில் கூட நல்ல கைப்பதம் இருக்கிறது. ஒரு நல்ல மனைவிக்கு இருக்க வேண்டிய எல்லா லட்ச ணங்களும் ஒன்று கூட விடா மல் இருக்கிறது.

ஆனால் இருக்கக் கூடாத ஒன்றும் கூட இருக்கிற தாமே. அம்மா எழுதியிருக் கிறாளே!

டிரஸ் மாட்டிக் கொண்டு மேஜை டிராவை இழுத்த வனுக்குப் பகீரென்றது.

''என் கடிகாரம் எங்கே?''

உரக்கவே கத்திவிட்டேன் போலிருக்கிறது. அவள் அவ சரமாக வந்தாள். அவள் கையிலே கடிகாரம்! என் கடிகாரம்! ''சமையலின் போது மணி பார்க்க எடுத் துப் போனேன். ஏண்டா ஒரு அலாரம் டைம்பீஸ் வாங்கி வைக்கக் கூடாதா?''

நம்ப வேண்டுமாம் சார். பீரோவில் ஒளித்து வைத்த டயம்பீஸை எடுத் துத் தந்தேன். அவள் சிரித் தாள்.

''இதை ஏண்டா உள்ளே வைச்சுப் பூட்டி யிருக்கே?'' ஆழ்ந்த குரலில் கேட்டாள்.

''உன் நண்பர்களையே நீ நம்பவில்லையா? கவலைப்படாதே. நானிருக்கிறேன். ஒரு சின்ன துரும்புகூட வெளியே போகாதுடா.''

எப்படி சார் கதை? இவளுக்குப் பயந்து தானே ஒளித்து வைத்தேன்.

''மத்தியானம் கொஞ்சம் சீக்கிரம் வரு கிறாயாடா. அம்மாவைக் கண் டாக்டரிடம் அழைத்துப் போக வேணும்.''

தலையாட்டிவிட்டு நகர்ந்தேன்.

மத்தியானம் லீவு போட்டுவிட்டு வந்து அத்தையை டாக்டரிடம் அழைத்துப் போய் வந்தேன். மருந்து போட்டு அனுப்பிவிட்டார்.

வீட்டுக்கு வந்ததும் டேபிள் டென்னிஸ் மட்டையைத் தேடினேன், காணோம்.

''டேபிள் டென்னிஸ் பாட்டா? இதோ!'' என்று நீட்டினாள். ''உள்ளே ஆணியில் மாட்டி னேன்'' என்றாள்.

இரவு மேஜை விளக்கைப் போட்டால் பல்பு எரியவில்லை. பல்பே அங்கில்லை.

''ப்யூஸ் போச்சு. நான்தான் தூக்கி எறிந் தேன். இந்தா புதிசு'' என்று நீட்டி னாள். வாங்கிப் பார்த்தேன். நிச்சய மாக அது பழைய பல்ப்தான். பிலிப் ஸில் 'எஸ்' எழுத்து அரைகுறையாகத் தெரிந்தது. சத்தியமாக அது பழைய பல்புதான்.






சென்ற ஞாயிறுக்கு முதல் ஞாயிறு 'மழைக்காகக் காத்திருக்கிறோம்' என்று தலையங்கம் எழுதினோம். பிறகு மழை கொட்டு கொட்டென்று கொட்டித் தீர்த்துவிட்டது. நாம் எழுதியதை வருண பகவான் படித்தாரா என்பது நமக்குத் தெரியாது. அவருக்கு அன்பளிப்புப் பிரதி அனுப்புகிறீர்களா என்று எங்கள் சர்க்குலேஷன் இலாக்காவைக் கேட்ட போது, 'இல்லை; 'இந்த விஷயத்தில் நாங்கள் ரொம்பவும் கண்டிப்பு' என்று சொல்லி விட்டார்கள். வருண பகவான் சந்தா கட்டியிருக்கிறாரா என்று அவர்களால் சொல்ல முடியவில்லை. ஆனால் டிபென்ஸ் காலனியில் உள்ள 'வருண மார்க்'கில் 'இந்துஸ்தான் டைம்ஸ்' விற்கப் படுவதாகச் சொன்னார்கள்....

இம்மாதிரி ஆரம்பித்து 'இந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையில் சமீபத்தில் ஒரு தலையங்கம் எழுதப் பட்டிருந்தது.

— பாபு

---

பேனாவைத் தேடினால் அவளே போய்க் கொண்டு வந்தாள். ''ஊருக்குக் கடிதாக எழுத நான்தான் கொண்டு போனேன்'' என்றாள்.

அவள் மனத்தை என்னிடமே மறைக்கப் பார்க்கிறாள். எனக்குக் கோபம் கோபமாக வந்தது. பேசாமல் எழுத ஆரம்பித்தேன்.

மேஜை விளக்கின் ஒளியில் அவள் என்னைப் பார்த்தாள். அவள் பார்த்துக் கொண்டே இருந்தாள்.

ஆபீஸிலிருந்து மத்தியானம் சாப்பிட வீட்டுக்குள் நுழைந்தபோது அவள் உள்ளே பன்னீரை அதட்டுவது கேட்டது. ''ஜல தோஷம் இருக்கிறபோது மோராவது? கிடை யாது. ஜீரக ரசம் இன்னொரு கரண்டி சாப் பிடு. ராதா, உனக்குப் பிடிக்குமேன்னு உருளைக்கிழங்கு மசாலாக் கறி பண்ணி இருக் கேன். சீக்கிரமா சாப்பிட வா.'' அவள் குரலில் அதிகாரமும் இருந்தது; அன்பும் தெரிந்தது.

வெளியே வந்தாள். ''சாயங்காலம் கொஞ் சம் சீக்கிரம் வருகிறாயாடா'' என்றவள் திருத்திக் கொண்டாள். ''வர முடியுமா ?''

அவள் தந்த மரியாதை எனக்கு வியப் பாக இருந்தது. நிமிர்ந்து பார்த்தேன்.

தலையைக் குனிந்து கொண்டாள். ''கொஞ் சம் ஷாப்பிங் போக வேண்டியிருக்கிறது'' என்றாள் கட்டை விரலால் தரையைக் கீறிய வாறு.

''ஆகட்டும்'' என்றேன்.

பார்க்கும் பார்வையாலேயே விலையை அளந்து மலிவான புடவைகளின் பக்கமாகப் போய் நின்றாள். மூன்று புடவைகளில் ஒன் றைத் தேர்ந்தெடுக்க, ''இந்த மூன்றில் எதை வாங்கட்டும் ?'' என்றாள் உதட்டைச் சுழித் துச் சிரித்தவாறு.

''இது தேவலை'' என்று நான் சொன்னதும் அதையே பொட்டணமாகக் கட்டச் சொல் லிக் காத்து நின்றாள். நான் கடைக்கு வெளியே சிகரெட் பிடிக்க ஆரம்பித்தபோது...

கடையில் சலசலப்பு ஏற்பட்டது. யாரோ ஓர் அம்மாளின் வானிடி பாகைக் காணோம்! எனக்குத் துணுக்கென்றது. சிகரெட்டை எறிந்துவிட்டுப் போய் அவளை முரட்டுத்தன மாகத் திருப்பியபோது... அவள் விழித்தாள். அதற்குள்...

அந்த வானிடி பாக் கிடைத்து விட்டது. அந்த அம்மாளின் காலடியிலேயே கிடந்திருக் கிறது.

'' என்ன?'' என்று அவள் கேட்டபோது, 'நேரமாகிறது' என்று சமாளித்தேன்.

பில் பணத்தை நான் தர முயன்றபோது ''நான் தருகிறேனே?'' என்றாள் மெதுவாக. பிடிவாதமாக நான் தந்தபோது அவள் மறுக்கவில்லை.

''ஒரு நிமிஷம்'' என்றவள் போய்ச் சிவப்பு நிற டை ஒன்றை எடுத்து என் மார்பில் வைத் துப் பார்த்தாள். ''இந்தக் கலர் உங்களுக்குப் பாந்தமாயிருக்கு'' என்றவள் பிடிவாதமாக 'டைக்கான' பணத்தைத் தானே தந்தாள்.

அவள் மெதுவாகச் சிரித்தபோது நான் மனத்துக்குள் அழுதேன்.

''ஒன்று கேட்கட்டுமா?'' பஸ்ஸுக்காகக் காத்திருந்தபோது கேட்டேன். ''வந்த புதிதில் என்னை 'டா' போட்டுப் பேசுவாயே? இப்ப மட்டும் என்ன புது மரியாதை ?''

அவள் பதில் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

என் மனத்தை என்னவோ செய்தது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. என் அண்ணா வந்தார். பெங்களூர் வாசம் அவரைத் தளதள வென்று ஆக்கிவிட்டிருந்தது.

''வாங்க, வாங்க'' என்று வரவேற்ற சாந்தியை வியப்புடன் பார்த்தார். அண்ணிக் கும் ஆச்சரியம். ''ஏய்! நீ எப்போது வந்தே ?'' என்றார்கள் பிரியத்துடன்.

அத்தை கொஞ்ச நேரம் 'பே' என்று விழித்துவிட்டு உள்ளே போய்விட்டாள்.

சாந்தியின் சுறுசுறுப்பையும், குடும்பப் பாங்கையும் பார்த்த அண்ணாவும் அண்ணியும் தன்னை நெருங்கி வந்தார்கள். ''சும்மா சொல்லக் கூடாது. பயல் அதிர்ஷ்டசாலி தான்டி'' என்றார்.

அண்ணி ரசித்துச் சிரித்தார்.

நான் மட்டும் மனத்துக்குள் புலம்பினேன்.

பேசிக் கொண்டேயிருந்த அண்ணி தம் விரலைப் பார்த்ததும் நிமிர்ந்தார். ''என் மோதிரம்.... மோதிரம் எங்கே ?''

---



மானேஜர்: எங்கேப்பா, உன் காலேஜ் சர்ட்டிபிகேட்ஸ் எல்லாம் ?

இளைஞன்: கொண்டு வர மறந்திட்டேன் சார்.

மானேஜர்: சே. சுத்த மோசம் !

இளைஞன்: என் சர்ட்டிபிகேட்டைப் பார்த்தால் இதையேதான் சொல்லுவீங்க சார்.

— சரஸ்வதிபஞ்சு

நான் எழுந்தே விட்டேன்.

அதற்குள் அவன் வந்தான். "குளியல் அறையில் கிடந்தது" என்று மோதிரத்தை நீட்டினான்.

எனக்குள் ஆத்திரம்.. பல்லைக் கடித்தேன். போய்விட்டான்.

"பெண்ணைப் பிடித்திருந்தால் சொல்லு. அத்தையிடம் நானே பேசிப் பார்க்கிறேன்" என்று கூறிக் கொண்டே வந்தவர் பாண்ட்டின் பின் பையைத் துழாவினார். எதையோ தேடினார்.

"என் பாக்கெட் சீப்பு. இங்கேதானே வைத்தேன்."

"எனக்குத் தெரியும். அந்தப் பெண் தான் திருடியிருக்கும்" என்றேன்.

"ஷட் அப்" என்றார் அண்ணா.

"உண்மைதான் அண்ணா." அழுத்தமாகச் சொன்னேன். "அந்தப் பெண்ணுக்கு கிளெப்டோமானியா வியாதி. சின்னச் சின்னதாக எதையாவது திருடிக் கொண்டே இருக்கும்."

"உளறாதே !"

"அம்மாவே எழுதி இருக்கிறாளே...." என்றவன் சட்டென்று வாயடைத்துப் போய் விட்டேன்.

அவன் நின்றான். நின்று கொண்டே இருந்தான். விருட்டென்று திரும்பிப் போய் அத்தையை இழுத்து வந்தான். "அவரோட சீப்பை எடுத்தாயா ?"

"இல்லையே !" என்ற அத்தை 'வே' என்று விழிக்கலானாள்.

"அம்மா! அம்மா!" அழுதாள் அவள். "உன்னாலே நான் படற வேதனை போதும். நீ திருடிக் கொண்டு வர்றதை எல்லாம் 'நான் எடுத்தேன்'னு சொல்லப் போக இப்ப நானே 'திருடி'ப் பட்டம் வாங்கிட்டேன். கொடும்மா ப்ளீஸ்."

அவள் அழுகை எல்லார் நெஞ்சையும் தொட்டது.

"அழாதேடி. கொடுத்திடறேன்." மடியிலிருந்த சீப்பை எடுத்தாள் அத்தை. "அழகா பளபளப்பா நீலமா இருந்ததா... எடுத்தேன். அதை நானே வச்சிக்கக் கூடாதா ?" குழந்தைத்தனமான ஆவலுடன் கேட்டாள்.

அதை விருட்டென்று பிடுங்கி அண்ணாவிடம் நீட்டினாள் சாந்தி. "புறப்படும்மா. இனிமேல் ஒரு நிமிஷம்கூட இங்கே தங்கக் கூடாது. வா" என்று புறப்படலானாள்.

நான் பதறினேன். அம்மா மொட்டையாக 'அவளுக்கு' என்று எழுதப் போக... அதை 'இவள்' என்று நான் ஏன் நினைத்துக் கொண்டேன்? அத்தையாக இருக்குமோ என்ற சந்தேகம்கூட எனக்கு வரவில்லையே, ஏன் ?

அண்ணாவும் அண்ணியும் எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவள் கேட்கவில்லை. புறப்பட்டு விட்டாள். பயல்களுக்குக்கூடக் கண் கலங்கி விட்டது. கொஞ்ச நாட்களில் அவர்களை அவ்வளவு தூரம் கவர்ந்து விட்டிருந்தாள் அவள். என்னை ஒரு குற்றவாளியைப் பார்ப்பது போலப் பார்த்தார்கள்.

ஸ்டேஷனில்....

"நான் போயிட்டுவரேன்டா" என்றாள்.

நிமிர்ந்து பார்த்தேன். மீண்டும் 'டா' போடுகிறாள்; மலர்ந்து வந்த புதிய உறவின் நினைவை முறித்துப் போட்டுவிட்டு.

அவள் மெதுவாகச் சிரித்தபோது நான் மனத்துக்குள் அழுதேன்.

திரும்பும்போது, "உனக்குக் கல்யாணமே ஆகாதுடா" என்றார் அண்ணா கோபத்துடன்.

உண்மைதான் சார். என்னைப் போன்ற அவசரக்காரர்களுக்குக் கல்யாணமே ஆகாது சார் ஆகாது.

## தட்டிக் கொடுத்தார் மனோகர்

சக்ரோச்சாரியார் தள்ளாடிக் கொண்டே காட்டில் நடந்து செல்லும் காட்சி. அவர் மனைவி அருந்ததி மேலும் நடக்க முடியாமல் சோர்ந்து கீழே விழுந்து விட்டார். மிகுந்த தாகம். "தண்ணீர் கிடைக்குமா பார்த்து வருகிறேன்" என்று வாட்டத்துடன் கூறிக் கொண்டே தள்ளாடிப் புறப்படுகிறார் மனோகர்.

அப்போது, "அம்மா ! நம்முடைய வாட்டர் பேக்கில் தண்ணீர் இருக்கிறது. தா, அம்மா கொண்டு போய்க் கொடுக்கிறேன்" என்று துள்ளிக் குதித்தான் என்னுடைய பையன் துரைமுருகன். மனோகரின் நடிப்பாற்றல் அந்த அளவுக்கு உருக்கி விட்டது !

நாடகம் முடிந்ததும், மேக்கப் அறைக்கு என் பையனை அழைத்துச் சென்று மனோகரிடம் விவரம் கூறி வந்தார் என் கணவர். மனோகர் பையனைத் தட்டிக் கொடுத்து மகிழ்ச்சியுடன் அனுப்பி வைத்தார்.

— ஆ. சுப்புலட்சுமி கணபதி



# உங்களுக்கு ரூ. 1.50 மிச்சம்

ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்
இரு **க்ளாக்ஸோஸ்-D**®
400 கிராம் பெட்டிகள் மீது.





க்ளாக்ஸோஸ்-D. நிமிடங்களில் உங்கள் களைப்பை விரட்டி புத்துணர்ச்சி மயமான தென்பூட்டுவது. 400 கிராம் பெட்டிகள் இரண்டை வாங்கி இன்றே ரூ 1.50 மிச்சம் காண்க.

முந்துங்கள்! 1976 ஜூலை 31 வரை அல்லது சரக்குகள் இருக்கும் வரை தான் இச் சலுகை. விரும்புவோர் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இக் கூப்பனைக் கத்தரித்தெடுத்து, பூர்த்திசெய்து உங்கள் வியாபாரியிடம் கொண்டு கொடுக்கவும்.

(கொட்டை எழுத்துகளில் பூர்த்திசெய்க)

வாடிக்கையாளரின் பெயர் ..............................

முகவரி ..............................

வியாபாரியின் பெயர் .............................. ஊர் ..............................




வணிக நண்பரே:

இக் கூப்பன், 400 கிராம் க்ளாக்ஸோஸ்-D பெட்டிகள் இரண்டு வாங்குவோருக்கு, அதன் விலையிலே ரூ 1.50 தள்ளுபடி பெற உரிமையளிக்கிறது. ஆனால், மேற்கூறிய விவரங்கள் முழுதும், சரிவரத் தெளிவாகப் புரியும்படி கூப்பனில் எழுதப்பட்டிருக்க வேண்டியது அவசியம்.

இரு பெட்டிகளின் மீதும் உள்ள, க்ளாக்ஸோஸ்-D என்றபெயர் தரித்த, துளைக்கோடிட்ட மேற்புற மூடி விளிம்புத் தாளைக் கிழித்தெடுத்து, கூப்பனுடன் இணைத்து, எங்கள் விற்பனைப் பிரதிநிதியிடம் கொடுங்கள். இச் செலவினை ஈடு செய்ய நாங்கள் 100 கிராம் பேகெட் ஒன்றையும் தருகிறோம் உங்களுக்கு. நன்றி.

ஃபேமிலி பிராடக்ட்ஸ் டிவிஷன், க்ளாக்ஸோ லபாரட்டரீஸ் (இந்தியா) லிமிடெட்

14

daCunha/GL 381 TAM



# முன்னுரை

"சுவைமிக்க கதைகள் பல எழுதிய கல்கியின் வாழ்க்கையே சுவை மிக்கதொரு கதையாய் இருந்திருக்கிறது."

கல்கியின் வாழ்க்கை வரலாற்றை எழுதும் பொறுப்பினை ஓர் இரண்டாண்டுத் திட்டமாக நான் மேற்கொண்டு நாலாண்டுகளில் நிறைவேற்றியிருக்கிறேன். இவ்வளவு காலம் கடந்தாயினும் இதனைச் செய்து முடிக்க இயன்றது குறித்து மனநிறைவு கொண்டுள்ளேன். அதே சமயம், இன்னும் சீராகவும் மேலாகவும் இதைச் செய்ய இயலவில்லையே என்ற மனக் குறையும் உண்டு.

சுவை மிக்க கதைகள் பலவற்றை எழுதிய கல்கியின் வாழ்க்கையே சுவை மிக்கதொரு கதையாய் இருந்திருக்கிறது. பலரும் உவந்து படிக்கும்படி சுவையுள்ளதாய்ப் "பொன்னியின் புதல்வர்" அமைந்ததற்கு இதுவே பெரிதும் காரணம். இக்கதையைத் தொகுத்துச் சொன்னது மட்டும்தான் என்னுடைய பங்கு.

இந்த வரலாற்றை எழுதக் கிடைத்தது அரியதொரு வாய்ப்பு. இந்த வாய்ப்பினை எனக்கு அளித்ததற்காகத் திரு சதாசிவத்துக்கும் திரு ராஜேந்திரனுக்கும் முதலில் நன்றி செலுத்துகிறேன்.

விடுதலைப் போராட்டம், பத்திரிகைப் பணி, பொதுத் தொண்டு முதலியவற்றில், தாமும் கல்கியும் இணைந்து இயங்கியது பற்றிய தகவல்களையெல்லாம் திரு சதாசிவம் எனக்குத் தெரிவித்தார். அவருடைய நிறுவனத்தாரும் எனக்கு வெகுவாக உதவி செய்தார்கள்.

திரு ராஜேந்திரன், தம் தந்தையாரின் வரலாற்றைத் தாமே எழுத எண்ணி அதற்கெனப் பெரும் அளவில் திரட்டி வைத்திருந்த பத்திரிகை வெட்டுகள், புத்தகங்கள், கடிதங்கள் முதலியவற்றை எனக்கு உதவினார். பின்னர் நானாகப் பலவற்றைத் தேடித் திரட்டுவதற்கும் துணையாய் இருந்தார். நான் பார்க்க விரும்பிய இடங்களுக்குத் தாமே என்னை அழைத்துச் சென்றார். (சில மாத காலம் நான் நோயுற்றிருந்தபோது ஒரு மகனைப் போல் அவர் என்னைக் கவனித்துக் கொண்டதையும் இங்கே சொல்ல வேண்டும்.)

கல்கியின் சொந்த வாழ்க்கை பற்றிய விவரங்களை அவருடைய குடும்பத்தாரும் உறவினர்களும் தெரிவித்தார்கள்.

அவருடைய பாலப் பருவம், இளமைக் காலம் பற்றிய தகவல்களை, ஃபிஜித் தீவிலுள்ள சுவாமி ருத்ரானந்தாவும், மாயூரத்தில் வசிக்கும் ஆர். கே. சுப்பிரமணிய பிள்ளையும் நேரிலும், கடிதங்கள் மூலமும் தெரியப்படுத்தினார்கள். இவர்களுடன் சேர்க்கவேண்டிய இன்னும் இருவர், திருச்சியில் கல்கியின் பள்ளித் தோழர்களாய் இருந்த, திருவாளர்கள், பி. ஜி. பாலகிருஷ்ணன், எம். டி. சீனிவாசன்.

உப்பு சத்தியாக்கிரகத்தின்போது கல்கி எழுதித் திரு சதாசிவத்தின் துணையுடன் வெளியிட்ட இரகசியப் புத்தகங்களில் இரண்டை, மன்னார்குடியிருந்து திரு சி.வயி. இராமசாமி அனுப்பி வைத்தார்.

ராஜாஜியின் குமாரர் திரு வி. ஆர். நரசிம்மன், தம் தந்தையாருக்குக் கல்கி எழுதிய கடிதங்களில் சிலவற்றைக் கொடுத்து உதவினார். டி. கே. சி.க்குக் கல்கி எழுதிய கடிதங்களை அன்னாரின் பேரர் திரு தீப. நடராஜன் பிரதி எடுத்துக் கொள்ளக் கொடுத்தார். விட்டலபுரம் திரு வி. எஸ். வேங்கடாச்சாரி சில கடிதங்களுடன் "துணைக் கல்கி" இதழ்களையும் உதவினார்.

கல்கியின் கட்டுரைகளும் அவரைப் பற்றிய அபூர்வமான சில விஷயங்களும் அடங்கிய 'வெள்ளிமணி'த் தொகுப்புக்களை திரு சாவி உதவினார். மற்றும் முக்கியமான பல தகவல்களையும் தெரிவித்தார்.

கல்கி இலக்கியத்தில் நன்கு தேர்ந்தவரான திரு டி. எஸ். ரங்கராஜன் இந்த வரலாற்றுக்குப் பயன்பட்ட யோசனைகள் சிலவற்றைத் தெரிவித்தார்.

அரிய நூற்களஞ்சியம் ஒன்றைக் கோட்டையூரில் சேமித்து வைத்திருக்கும் திரு ரோஜா முத்தையா எனக்கு உதவியவற்றில் முக்கிய

மானவை, ''சாரதையின் தந்திரம்'' முதற் பதிப்புப் பிரதியும் சில அபூர்வக் கடிதங்களும்.

ஆனந்தவிகடன் அலுவலகத்திலும் மறைமலையடிகள் நூலகத்திலும், பல நாட்கள் தொடர்ந்து நான் ஆராய்ச்சி நடத்துவதற்கு வசதி செய்து கொடுத்தார்கள்.

இவர்கள் எல்லோருடைய உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் பெரிதும் நன்றி பாராட்டுகிறேன்.

இன்னும் பலரும் என் நன்றிக்கு உரியவர்கள்; என் வேண்டுகோளின் பேரிலோ தாமாகவோ பல தகவல்களை எனக்குத் தெரிவித்தவர்கள்; நூல்கள், பழைய பத்திரிகைப் பிரதிகள், படங்கள் முதலியற்றைக் கொடுத்தவர்கள். திருத்தங்கள் தெரிவித்தவர்களும் சிலர் உண்டு. இவர்களுடைய பெயர்களை இத்துடன் முதல் இணைப்பாகச் சேர்த்துள்ளேன்.

இந்தக் கட்டுப்பாடும் சரி, இன்னும் சில நெறிமுறைகளும் சரி, நானே விதித்துக் கொண்டவை. மற்றப்படி, யாராலும், எதுவாலும் பாதிக்கப்படாமல், சுயேச்சையாய் இயங்கி, என் தனிப் பொறுப்பில் இந்த வரலாற்றை எழுதியிருக்கிறேன்.

இவ்விதம் நான் எழுதியது சிறிதும் மாற்றமின்றி வெளியாகியிருக்கிறது என்பதையும் சிறப்பாய்க் குறிப்பிட வேண்டும்.

இந்தப் பணியில், மற்றெல்லோரையும்விட மிக அதிகமாகக் கல்கியே எனக்கு உதவி செய்திருக்கிறார் — தம்முடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் அனுபவங்களையும் பற்றித் தாமே நிறைய எழுதி வைத்ததன் மூலம் செய்துள்ள உதவி இது.

# புதல்வர் நன்றியுரை

சுந்தா

அடுத்து இந்த வரலாற்றுக்கு நான் துணையாய்க் கொண்ட நூல்களின் பட்டியல் ஒன்றை இணைத்திருக்கிறேன். பொதுவாக அல்லாமல், நேராகவும் குறிப்பாகவும் பயன்பட்ட புத்தகங்கள் மட்டுமே அதில் உள்ளன.

இந்த வரலாற்றை எழுதுவதற்கு நான் கையாண்ட உத்தியைக் கண்டு, தொடக்கத்தில் சில வாசகர்கள் குழப்பமும், ஏமாற்றமும் அடைந்தார்கள். பின்னர் மேலே படிக்கப் படிக்க அவர்கள் குழப்பம் தெளியப் பெற்று, இந்த உத்தியை ஏற்றுக்கொண்டார்கள். இந்த வரலாற்றின் நாயகர் வாழ்ந்த வாழ்க்கையின் இயல்பையும், அந்த வாழ்க்கை சம்பந்தமாய்க் கிடைத்த விஷயங்களையும் ஒருங்கே கருத்தில் கொண்டு நான் நிர்ணயித்த உத்தி இது.

கல்கியின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் இந்த வரலாற்றில் சேர்த்துக் கொள்ளவில்லை. அப்படிச் சேர்த்துக்கொள்வது சாத்தியமும் அல்ல. இதே போல், கல்கியுடன் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரையும் நான் குறிப்பிடவில்லை. குறிப்பிட்டவர்களிலும் — அவர்களில் சிலர் தனித் தனி வரலாற்றுக்கு உரியவர்களாய் இருந்தும் — இந்த வரலாற்றுக்குப் போதுமான அளவு மட்டுமே இடம் பெற்றுள்ளார்கள். இந்த மட்டுப்பாடு புரிந்து கொள்ளக் கூடியதே.

எழுத்து வடிவிலும், வாய் மொழியாயும் கிடைத்த தகவல்களில், உண்மையானவை என ஆய்ந்து தேர்ந்தவற்றை மட்டுமே நான் பயன்படுத்திக் கொண்டேன். சந்தேகத்துக்கு இடமானவற்றை அவை எவ்வளவு சுவையுள்ளதாய் இருப்பினும்—அறவே தவிர்த்துள்ளேன். இத்துடன், சில இடங்களில் முழு உண்மையைச் சொல்வதையும் தவிர்த்துள்ளேன். இந்தக் கட்டுப்பாடும் புரிந்து கொள்ளக் கூடியதே.



''இந்த வரலாறு எனக்கு எழுதக் கிடைத்தது அரிய தொரு வாய்ப்பு''.

அவருடைய ஆதரவினாலும் செல்வாக்கினாலும் நான் வெகுவாகப் பயன் அடைந்தவன் என்பதை முன்பே சொல்லி இருக்கிறேன். அந்தப் பயனுடன், இந்த வரலாற்றை எழுதியதன் மூலம் அவருடைய பெயருடன் என் பெயரை இணைத்துக் கொண்டிருக்கிறேன்.

நன்றிப் பெருக்குடன் அன்னாரின் நினைவைப் போற்றி அஞ்சலி செய்கிறேன்.

## இணைப்பு ஒன்று: உதவி செய்தோர்

அம்பிகை பாகன் ச. - யாழ்ப்பாணம், அரியநாயகம் சொ. புலவர்-கோவை, அருணாசல செட்டியார் பி.வி.- பெருங்களத்தூர், அருணாசலம் மு. - சென்னை, அன்பு பழம் நீ.-சென்னை, ஆசார்யா பி.ஸ்ரீ.- விட்டல்புரம், ஆரணி கிருஷ்ணன் என். எஸ்.- கோசப்பாளையம், ''ஆர்வி''-சென்னை, இரங்கராசன் ஆ. வை.- பெங்களூர், இராமானுஜம், பி. கே.- டெல்லி, உமாசந்திரன்-சென்னை,-எல்லார்வி சென்னை.

கண்ணன் டி. - சென்னை, கமலாசுந்தரம் - சென்னை, கமலாவிருத்தாசலம் - சென்னை, கல்யாணராமன் கே. ஆர். - வாலாஜாபேட்டை, கனகராஜ அய்யர் - கோட்டையூர், கிருஷ்ணசாமி - ஏ. டி. சென்னை, கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்-சென்னை, கிருஷ்ணமூர்த்தி எஸ். - சென்னை, ''கிளஜா'' - தஞ்சாவூர், ''குமுதினி'' - ஸ்ரீரங்கம், கைலாசசுந்தரம் மு. - எட்டயபுரம், கோதண்டராமன் ப. புதுச்சேரி, கோவி. மணிசேகரன் - சென்னை, கௌரி டி. - திருச்செங்கோடு.

சங்கரன் டி. - சென்னை, சந்திரசேகரன் இ. - சென்னை, சரஸ்வதி சங்கரன் ஜி. - மதுரை, சர்மா பி. என். எஸ். - காளப்பேட்டை, ''சாண்டில்யன்'' - சென்னை, சாமிநாதசர்மா வெ. - சென்னை, ''சிட்டி'' - சென்னை, சித்தரஞ்சன் கே. - எட்டயபுரம், சிவபாதசுந்தரம் சோ. - சென்னை, சிதாராம மூப்பனார் - தூத்துக்குடி, சீதாலெட்சுமி கே. - திருச்சி, சீனிவாசன், வி. ஜி. - மதுரை, சீனிவாசராகவன் அ. பேராசிரியர் - தூத்துக்குடி, சீனிவாசன் ஏ. - சென்னை, சுகி சுப்பிரமணியன் - சென்னை, சுந்தரராஜ் டி. - சென்னை, சுந்தரராஜன் வி. எஸ். - செகந்தராபாத், சுந்தரம் எஸ்.டி.- சென்னை, சுப்புலக்ஷ்மி எஸ். டி. - சென்னை, சுப்பிரமணியம் கே. எஸ். - சென்னை, சுப்பிரமணியம் என்.- பம்பாய், சுப்பிரமணியம் எஸ். - பாளையங்கோட்டை, சுப்பிரமணியராஜ், டி. என். - சென்னை, சுப்பிரமணியம் புத்தனேரி ரா. - சென்னை, சுப்பிரமணியன் ராம. - சென்னை, சுப்பையா டி. - எட்டயபுரம், ''சுப்ரபாலன்'' - சென்னை, சுவாமிநாதன் கே. பேராசிரியர் - டெல்லி, செட்டியார் ஏ. கே. - சென்னை, செல்லப்பா சி. சு. - சென்னை, சோமு மீ. ப. சென்னை, - சௌந்திரராஜன் ஆர். சென்னை,

தம்பி சீனிவாசன் - சென்னை, தியாகராஜன் எஸ். வி. - மதுரை, ''துமிலன்'' - சென்னை, தேசிகன் வி. சி. எஸ். - சென்னை, நடராஜ அய்யர், ஆர். - திருச்சி, நடராஜன் அ. வெ. - சென்னை, நரசிம்ம அய்யங்கார், டி. எம். - திருச்சி, 'நாடோடி' - சென்னை, நாரண துரைக்கண்ணன் - சென்னை, நாராயணசாமி நாயுடு - மாயூரம்,

பகவதி டி. கே. - சென்னை, ''பகீரதன்'' - சென்னை, பஞ்சாபகேசன் டி. ஆர். - சென்னை, பதிவாளர் - சென்னைப் பல்கலைக் கழகம், பத்மநாபன் ரா அ. - விழுப்புரம், பத்மா ஆர். - மாயூரம், பலராம ராஜா - ராஜபாளையம், பார்த்தசாரதி ரா. - சென்னை, பார்த்தசாரதி டி. எஸ். - சென்னை, பாலசுப்பிரமணியம் இரா. ஸ்ரீபெரும்புதூர், பாலசுப்பிரமணியன் எஸ். - சென்னை, பூர்ணம் சோமசுந்தரம் - மாஸ்கோ, பூர்ணம் விசுவநாதன்- சென்னை, ''பூவண்ணன்'' - சென்னை, பெரியசாமித் தூரன் - சென்னை, பொன்னி லக்ஷ்மணன் - எர்ணாகுளம்.

மகரபூஷணம் ஏ. என். - திருநெல்வேலி, ''மகரம்'' - சென்னை, மகராஜன், எஸ்.-சென்னை, மணி பி. எஸ். - சென்னை, மணியன், என். வி.எஸ்.- சென்னை, மாரியப்பன் - எட்டயபுரம், முத்து கோ. ராமன் - சென்னை, முத்துக்குமாரசுவாமி இரா. சென்னை.

ரங்கநாத சாஸ்திரிகள் - சென்னை, ரங்கராஜன் ஏ. எஸ். பி. - பெங்களூர், ரங்கநாதன் பி.எஸ்.- டெல்லி, ''ரத்னம்'' - சென்னை, ராமகிருஷ்ண என்.- மாயூரம், ராமசுவாமி எம். எஸ். திருவனந்தபுரம், ராமச்சந்திரன் நா. - சென்னை, ராமரத்தினம் வி.- சென்னை, ராமன் எம். எஸ். - தூத்துக்குடி, ராமானுஜம் சி. ஆர். - ஊட்டி, ராமையர் ஏ., பேராசிரியர் - சென்னை, ராம்நாத் (பேசும் படம்) சென்னை, ராஜகோபாலன் வி. - அரக்கோணம், ராஜம் எஸ். - திருச்சி.

வசுமதி ராமசுவாமி - சென்னை, வரதப்பன் சி. என். - சென்னை, வாசுதேவன் வி. சி. சென்னை - வாணதி திருநாவுக்கரசு - சென்னை, விகடம் கிருஷ்ணமூர்த்தி - சென்னை, ''விக்கிரமன்'' - சென்னை, விசாலாட்சி சாஸ்திரி - பம்பாய், விமலா மனுவேல் - சென்னை; வெங்கடாசலம், பி. எஸ். - சென்னை, வேணுகோபால் நா. - சென்னை.

ஜகந்நாத ராஜா, மு. கு. - இராஜபாளையம், ஜேமா அய்யர் - பம்பாய், ஸ்ரீனிவாஸன் கே. எஸ். - டெல்லி, ஸ்ரீனிவாசன் எம். டி. - சென்னை, ஸ்ரீநிவாசன் எம். வி. - இந்தோர், ஸ்ரீநிவாஸ் ஆர். - நங்கநல்லூர்.

## இணைப்பு இரண்டு: பயன்பட்ட நூல்கள்


அபிதான சிந்தாமணி - சிங்காரவேலு முதலியார்
ஆனந்தவிகடன் தொகுப்புகள்
இலக்கியக் கலை - அ. ச. ஞானசம்பந்தம்
இன்றைய தமிழ் இலக்கியத்தில் மனிதன் - கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்
எழுதுவது எப்படி - ''மகரம்''
எழுத்தாளர் கல்கி - மலாயாப் பல்கலைக் கழகம்
எனது நாடக வாழ்க்கை - அவ்வை. சண்முகம்
எனது நினைவுகள் - எம். பக்தவத்சலம்
எனது போராட்டம் - ம. பொ. சி.
எனது வாழ்க்கை அநுபவங்கள் - ஏவி. எம்.
என் கதை - நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை
கட்டுரை மலர் - ஈ. சா. விசுவநாதன்
கண்டறியாதன கண்டேன் - சின்ன அண்ணாமலை
கதைக் கலை - அகிலன்
கலைக் களஞ்சியம்,
கல்கி தொகுப்புக்கள்
கல்கி பிறந்தார் - இராஜு அரிய ரத்தினம்
கல்கி புராணம் - வே. சோமதேவ சர்மா,
கல்கி முதல் அகிலன் வரை - பூவை எஸ்.ஆறுமுகம்
கல்கியின் நூல்கள்
காற்றினிலே வரும் கீதம் - ரா. கணபதி
குமரி மலர் இதழ்கள்,
சத்திய கங்கை இதழ்கள்
சித்திர பாரதி - ரா. அ. பத்மநாபன்
சிறிது வெளிச்சம் - (சிட்டியின் முன்னுரை)-கு.ப.ரா.
''சுடர் - கல்கி மலர்'' - தில்லித் தமிழ்ச் சங்கம்
சோழர் சரித்திரம் - சதாசிவ பண்டாரத்தார்
சோழன் இராஜராஜன் - ஏ. பாலசுந்தரம்
டி.கே.சி. - வித்துவான் வ. சண்முகசுந்தரம்
தஞ்சாவூர் மாவட்டம் - ''சோமலெ''
தமிழ் இலக்கிய வரலாறு - எம். ஆர். அடைக்கலசாமி
தமிழ் இலக்கிய வரலாறு - வி. செல்வநாயகம்
தமிழ் இலக்கிய வரலாறு - டாக்டர் மு. வரதராசன்
தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள் - இரா. தண்டாயுதம்
தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும் - கி.வா.ஜ.
தற்காலத் தமிழ் இலக்கியம் - ஏ. வி. சுப்பிரமணியம்
தேசியம் வளர்த்த தமிழ் - கா. திரவியம்
நமது பண்பாடு - க. சி. கமலையா
நவசக்தி தொகுப்புக்கள்
நாவல் இலக்கியம் - 'எழில் முதல்வன்'
நாவல் வளம் - டாக்டர் இரா. தண்டாயுதம்
நான் பிறமை திங்கள் இதழ் விளக்க வரிசை - க. அ. இராமசாமிப் புலவர்
நானறிந்த தமிழ் மணிகள் - ''பி.ஸ்ரீ.''
நினைவு அலைகள் - டாக்டர் தி. சே. சௌ ராஜன்
புதுத் தமிழ் முதல்வர்கள் - சாலை. இளந்திரையன்
புதுத் தமிழ் முன்னோடிகள் -
புதுமைப்பித்தன் - ரகுநாதன்
புனைகதை வளம் - எழில் முதல்வன்
பொன்விழா மலர் - திருச்சி தேசியக் கல்லூரி
மணிவிழா மலர்கள் - வ. ரா., பி. எஸ். ராமையா, சாவி.
மலாயா முதல் கானடா வரை - ஏ. கே. செட்டியார்
மாமல்லை - இரா. நாகசாமி
முதல் ஐந்து நாவல்கள் - க. நா. சுப்பிரமணியம்
ரசிகமணி டி. கே. சி. - பாஸ்கரத் தொண்டைமான்
ரசிகமணி டி.கே.சி.யின் கடிதங்கள்
ராஜாஜி - கௌசிகன்
வளரும் தமிழ் - 'சோமலெ'
வளரும் தமிழ் இலக்கியம் - கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்
வாழ்க்கைக் குறிப்புக்கள் - திரு வி. க.
விடுதலைக்குப்பின் தமிழ் நாவல்கள் - கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்
வெள்ளிமணி - தொகுப்புக்கள்
வைரவிழா மலர் - திருச்சி தேசியக் கல்லூரி
An Auto biography - Mahatma Gandhi
The Colas - K. A. Neelakanda Sastri
Imagination and Thinking - Peter Nckeller.



தி. நகர், ஸ்ரீ M. S. கிருஷ்ணஸ்வாமி அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி K. சுப்பிரமணியனுக்கும் (M. I. T. Chrompet), நன்னிலம் ஸ்ரீ சிவராம கிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களின் புதல்வி சௌ. விசாலாக்ஷிக்கும் சமீபத்தில் நன்னிலத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

பண்ணையார் பூபதியின் தங்கை ஓர் இளம் விதவை; அவள் மனம் பண்ணை வேலையாள் முத்துவை நாடுகிறது; அவன் உள்ளம் பயந்தாலும் அவன் உடல் அவளை நாடுகிறது. இந்த விஷயம் பண்ணையார் காதுக்கு எட்டி விடுகிறது. முத்து ஊரைவிட்டே ஓடிவிடுகிறான். அவனை வஞ்சம் தீர்க்கும் வெறியில் பூபதி சென்னைக்கு வந்து சேருகிறான். அங்கு அவன் நண்பனின் மனைவி நெறி தவறுகிறாளாம்; அதைக் கண்டு அவன் மனம் மாறுகிறதாம். அடடா ! நாட்டில் இப்போது நிலவுகிற நெருக்கடி நிலையில் எப்பேர்ப்பட்ட அவசியமான உயர்ந்த கருத்துக்கள்! போதாக்குறைக்குக் கடைசியில் முத்து இறந்து விடுகிறான். கதையோ ஆரம்பத்திலேயே செத்து விட்டது !

# உணர்ச்சிகள்



கள்ளம் கபடம் இல்லாத, உலகம் தெரியாத, கிராமத்து வாலிபனான முத்துவின் அந்தப் பாத்திரத்தைக் கமலஹாஸன் ஏற்று அருமையாக நடித்திருக்கிறார்.

பரிதாபத்துக்குரிய விலை மாதாக வந்து இந்தப் படத்துக்கே களையூட்டும் ஸ்ரீவித்யாவின் நடிப்பு.... அடேயப்பா ! பிரமாதம், போங்கள் ! அவர் முகத்தில்தான் எத்தனை விரக்தி ! பேச்சில்தான் எத்தனை அலட்சியம்! அப்பாவி முத்துவைத் தம்பியாக ஏற்றுக் கொண்டு அவன் நடத்தை கெட்டுப் போவதை அறிந்து வீட்டை விட்டு வெளியேற்றும் போது எத்தனை கோபம்!

வில்லனாகவே பார்த்துப் பழகிய ராமதாஸை இப்படத்தில் நல்லவனாகப் பார்க்கிறோம். அவர் நடிப்பும் நல்லபடியாயிருக்கிறது. பூபதியின் விதவைத் தங்கையாக வரும் எல். காஞ்சனாவிடம் துடிப்பு இருக்கிறது. ஆனால் நடிப்பு....?

கதை, வசனம் எழுதியிருப்பவர் ஆர். ஸி. சக்தி. டைரக்ஷனும் அவருடையதுதான். வசனம் சிந்திக்க வைக்கிறது. அதுவும் மரகதம் (விலை மாது) பேசும் போது நம் இதயத்தையே உலுக்குகிறது.

கடைசியில், முத்து கெட்டலைந்து, வி. டி. யில் (ரகசிய நோய்) சிக்கி, ஆஸ்பத்திரியில் பரிதாபமாக இறந்துவிடுவதாகக் காட்டி நம் உணர்ச்சிகளையெல்லாம் அசிங்கப்படுத்திவிட்டனர். போஸ்டர் அருவருப்பின் உச்சம். தமிழ் ''உணர்ச்சிகள்'' மலையாளத்தில் ''ராச லீலை''யாக வந்து சக்கைப் போடு போடுகிறது. அதில் 'வி. டி.' இடையாது. கமலஹாஸனும், ஜெயசுதாவும் அருமையாக நடித்திருக்கிறார்கள். தமிழில் மட்டும் மாற்றித் தொலைப்பானேன் ? தமிழ்ப் படம் பார்ப்பவர்களுக்கு உணர்ச்சியே இல்லை என்று நினைத்துவிட்டார்களா ?

— காந்தன்





## 'ஆபத்தில் ஆதரவு'

ஏ.என்.பட்

**பு**யல் வீசியது. ஒரு தெப்பத்தில் ஒரு புலி, ஒரு பாம்பு, ஒரு குரங்கு ஆகியவற்றுடன் ஒரு மனிதனும் தத்தளித்துக் கொண்டிருந்தான். நன்றாக நனைந்துவிட்டனர் என்றாலும் பயத்தில் ஒருவருக்கொருவர் ஆதரவாக இருந்து வந்தனர். தெப்பம் ஒரேயடியாக ஆடி இவர்களைத் தடுமாறச் செய்தது. அந்த ஆபத்தான கட்டத்தில் தங்களுக்கிடையே இருந்த இயற்கையான விரோத பாவங்களை மறந்து அவர்கள் ஒருவரோடு ஒருவர் ஒட்டிக் கொண்டனர்.

சீக்கிரமே புயல் அடங்கி சூரியன் வெப்பமளித்தது. அவர்கள் சூழ்நிலையை உணர ஆரம்பித்தனர். திருவாளர் குரங்குதான் முதலில் சுருசுருப்படைந்தார். தமது இயல்பான குறும்புத்தனத்துடன் பாம்பைச் சீண்டி விளையாடினார். பாம்பு குரங்கைக் கடித்து அதன் உயிரைப் பறித்துவிட்டது. பாம்பின் இந்த நடத்தையைக் கண்ட மனிதன் கலவரமடைந்து அதை ஒழித்துக்கட்ட நினைத்தான். தெப்பம் செலுத்தும் கோலினால் பாம்பைத் தண்ணீருக்குள் தள்ளிவிட்டான். இப்போது புலிக்குப் பசி எடுத்தது. அது மனிதனைத் தாக்குவதற்கான அறிகுறிகளைக் காட்டத் தொடங்கியது. தப்ப எண்ணிய மனிதன் நீருக்குள் பாய்ந்தான். புலியைப் பழி வாங்கத் தெப்பத்தைக் கவிழ்த்தும் விட்டான். பாம்பு, புலியுடன் மனிதனும் நீரில் மூழ்கி மடிந்தான்.

நீதி: நீங்களே எழுதிக்கொள்ளவும்




## 'பண்டிதனும் பாமரனும்'

**ம**கா மேதாவியான ஒரு பண்டிதனும் ஒரு குடியானவனும் ஒரு படகில் ஆற்றைக் கடந்து கொண்டிருந்தார்கள். பண்டிதன், தான் ஆண்டவனின் விசேஷச் சலுகை பெற்றவன் என்றும் மற்றவர்களை விடத் தன்னை உயர்ந்தவனாக ஆண்டவன் படைத்தான் என்றும் பெருமை அடித்துக் கொண்டான். தன்னைப் பற்றி, தன் ஆற்றலைப் பற்றி மிக அழகாக வர்ணித்துக் கொண்டான்.

இதைக் கேட்டுக் கொண்டே இருந்த முதலை பண்டிதனைப் பகலுணவாக்கிக்கொள்ளத் தீர்மானித்தது. இத்தனை உன்னதமானவனாக ஆண்டவனால் படைக்கப்பட்டவன் உண்பதற்கு ரொம்ப ரொம்ப ருசியாக இருப்பான் என்று அது எண்ணியது. படகைக் கவிழ்த்துப் பண்டிதனை விழுங்கியது.

பண்டிதன் மரண வேதனையை அனுபவிக்கும்போது, அந்த முதலை தனக்கு விசேஷ மதிப்புத்தந்து ஒதுங்கவில்லையென்பதை உணர்ந்தான். எல்லா மனிதர்களும் சமம் என்ற உண்மை அவன் உள்ளத்தில் உதயமாயிற்று. பண்டிதனை விழுங்கிய முதலை அவன் உடலில் விசேஷ ருசி ஒன்றையும் காணவில்லை. எல்லா மனிதர்களும் ஒரே மாதிரிதான் ருசிக்கிறார்கள் என்று அறிந்து கொண்டது. குடியானவன் எண்ணினான்: 'பண்டிதன் எவ்வளவுதான் அறிவாளியாக உன்னத நிலையில் இருந்தாலும் அவனும் சாமானிய மனிதனைப் போலத்தான் சாக வேண்டியிருக்கிறது!'

நீதி: நீங்களே எழுதிக்கொள்ளவும்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு